

# பாரதேந்து அரிச்சந்திரர்

மதன் கோபால்



இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை, மன்னர் சுத்தோதனனுக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து இந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்திரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

(நாகார்ஜுன மலைச் சிற்பம்—கி.பி. இரண்டாம் நூற்றாண்டு. பட உதவி: நேஷனல் மியூஸியம், புது தில்லி.)

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# பாரதேந்து அரிச்சந்திரர்

மூலம்

**மதன் கோபால்**

தமிழாக்கம்

**முத்துச் சண்முகன்**



சாகித்திய அக்காதெமி

*Bharatendu Harishchandra* — Tamil translation by Muthu Shanmugan of Madan Gopal's monograph in English. Sahitya Akademi, New Delhi (1986.) Rs. 5


First Published : 1986

**சாகித்திய அக்காதெமி**

*தலைமை அலுவலகம் :*
*ரவீந்திரபவன், 35,* பெரோஸ்ஷா *சாலை, புது தில்லி 110 001.*

கிளை அலுவலகங்கள் :

*29, எல்டாம்ஸ் சாலை, தேனும்பேட்டை, சென்னை-600 018.*

*பிளாக் V—B, ரவீந்திர சரோபர் ஸ்டேடியம், கல்கத்தா 700 029.*

*172, பம்பாய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை,*
*தாதர், பம்பாய் 400 014.*

மாருதி பிரஸ்,
*173, பீட்டர்ஸ் சாலை*
*சென்னை-600 014*

# பாரதேந்து அரிச்சந்திரர்

## 1

பத்தொன்பதாம் நூற்றுண்டில் இந்திய நாட்டில் பல பெரிய சிந்தனையாளர்கள் தோன்றினர். அவர்களில் ஒருவரான பாரதேந்து அரிச்சந்திரர், மிகச் சிறந்த அறிவாளியாகவும், பல்வேறு துறைகளில் வல்லுநராகவும் விளங்கினுர். அவர் ஒரு பெரிய சமூக சீர்திருத்தவாதி. அதோடு, இந்திய மக்களின் அறிவும், மனமும் விரிவடைதல் வேண்டும் என்று மிகவும் பாடு பட்டார். ஈஸ்வரசந்திர வித்தியாசாகர், திருவிதாங்கூர் மன்னர் கேரளவர்மா, கெசவ் சந்திர சென், மதுசூதன தத், போன்ற இந்தியப் பெருமக்களோடு நண்பராக வாழ்ந்தார். வங்காள மொழியில் தோன்றிய புத்தெழுச்சியை, புதிய போக்குகளை அரிச்சந்திரர் இந்தி மொழியிலும் கொண்டுவந்தார். இக்கால இந்தி மொழி உருவாவதற்கும், அம்மொழி பல்வேறு இலக்கியத் துறைகளில் வளர்ச்சி பெறுவதற்கும் வழிகாட்டியவர் அரிச்சந்திரரே. இதனுல் இவரை இக்கால இந்தி மொழியின் தந்தை என்றே கூறுவர்.

இந்தி மொழியில் முன்னோடியான ஒரு சிறந்த நாடக ஆசிரியர் என்று அவர் கருதப்பட்டாலும், (வட மொழி, ஆங்கிலம், வங்காளம் முதலிய மொழிகளிலிருந்து மொழிபெயர்ப் பாகவும், சொந்த படைப்பாகவும் சுமார் பதினெட்டு நாடகங்கள் இவர் எழுதி இருக்கிறார்) இந்தி இதழியலின் தொடக்க கால வளர்ச்சிக்கும் அவர் மிகவும் பாடுபட்டார். முதன்முதலில் குறிப் பிடத்தக்க முறையில் இந்தியில் கட்டுரைகள், பிரயாண நினைவுகள், வாழ்க்கை வரலாறு, வரலாறு, தொல் பொருள் எனப் பல்வேறு துறைகளில் எழுதியவர் அவர். சிறந்த இந்தி கவிஞராக விளங்கிய அவர், பல்வேறு யாப்புக்களில் சுமார் 3000 பக்திப்பாடல்களைப் பாடி இருக்கின்றுர். முதன் முதலில் கடீபோலியில் (செம்மையான மொழி) கவிகள் எழுதியவர் அவர்தான். பிரஜ் மொழி மெதுவாகத் தன் செல்வாக்கினை இழந்து மறைந்தது. கடீபோலி அதன் இடத்தைப் பெற்றது.

தனது கடைசி நாட்களில், அனேக ஆசிரியர்களை இந்தியில் புதினங்கள் எழுதுமாறு தூண்டினுர். இந்திய மொழி இலக்கிய வரலாற்றினை முதன்முதல் எழுதிய சிறந்த வெளிநாட்டு

ஆசிரியராகிய கிரியர்சன், இவரை அக்காலத்தில் மிகவும் புகழ்மிக்க இந்தியக் கவிஞர் எனவும், அவர் காலத்தில் வாழ்ந்த மற்ற இந்தியர் எவரையும்விட சுதேசி மொழியை— குறிப்பாக இந்தி மொழியைப் பொதுமக்களிடையே அதிகமாகப் பரப்பியவர் அவர் எனவும் குறிப்பிட்டதில் வியப்பில்லை. எப். இ. கேய் என்ற வெளிநாட்டு இந்தி இலக்கிய வரலாற்றாசிரியரின் கணிப்பின்படி அவர் 175 நூல்கள் எழுதி இருக்கின்றார். (63 நூல்களை இவர் விட்டுவிட்டார்). முப்பத்து நான்கு வயதினுள்ளே, இந்தி இலக்கியத்தில் ஒரு முதன்மை இடத்தைப் பெற்றதும், பல்வேறு துறைகளில் இலக்கியப் படைப்புக்களைத் தந்ததும் மிகப் பெரிய சாதனைகளே.

## 2

(அரிச்சந்திரர் காசியில் அகர்வால் குடும்பத்தில் பிறந்தவர். அவருடைய முப்பாட்டனார் சேட் பத்தேஷ் சந்து, சேட் அமீன் சந்திரனுடைய ஒன்பது புதல்வர்களில் ஒருவர். அமீன் சந்தையும், அவருடைய கூட்டாளியாகிய மீர்ஜாபரையும், கிளைவ் பிரபு ஏமாற்றிவிட்டார். இதனைத் தாங்க முடியாது அறிவு கலங்கிய அவர் சிறிது காலத்தில் மரணமடைந்தார். அவருடைய மகன் பத்தேஷ் சந்து காசியில் குடி ஏறினார். அவரைத் தொடர்ந்து அவருடைய உடன்பிறந்தார் எண்மரில் ஒருவரும் காசிக்கு வந்தார். இருவரும் இழந்த குடும்பச் செல்வங்களை மீட்டனர். காசியின் செல்வக் குடும்பத்தில் திருமணம் செய்துகொண்டு அதனாலும் தம் செல்வத்தைப் பெருக்கினார். விரைவிலேயே அவருடைய கூட்டுக்குடும்பம் காசி மகாராசாவிற்குப் பொருள் கொடுத்துதவும் தகுதியைப் பெற்றது.

சேட் பத்தேஷ் சந்தினுடைய பெயரன் கோபால் சந்திரன்; அவன் ஒரு திறமையான வியாபாரி. அவருடைய வியாபார அறிவும், கவித்துவ ஆற்றலும் ஒன்றாக வளர்ந்தன. "கிர்தர் தாஸ்" என்ற புனைபெயரில் நாற்பது நூல்கள் எழுதினார். இவற்றில் பல, அவர் குடும்பத்தார் போற்றிவந்த வைணவப் பெரியார்களின் அறவுரைகளைப் பற்றியன.

ஆற்றலும், அன்பும் நிறைந்த கோபால் சந்திரர், இந்தியாவின் அப் புனித நகரில் பெரும் புகழோடு வாழ்ந்தார். ஆங்கிலேயரின் ஆதரவில் நடந்துவந்து மலர்க் காட்சிப் போட்டியில், அவருடைய தோட்டங்களில் வளர்ந்த பூக்கள் பரிசுகளைப் பெற்றன. கங்கையில் ஆண்டுக்கொருமுறை நடக்கும் "புடவா

மங்களம்'' (தெப்பத் திருவிழா) ஒரு முக்கியமான திருவிழா. இது ஒரு வாரம் நடைபெறும். இவ்விழாவிற்கு, காசி மக்கள் அனைவரும் கங்கைக் கரையில் கூடி, அவ்விழாவில் பங்கு கொள்வர். அழகான தோணிகளில், நகரிலுள்ள புகழ் மிக்க நாட்டியப் பெண்கள் நடனமாட, சிறந்த இசைவாணர்கள் பாடப் படகுகள் மிதந்து செல்லும். இவ்விழாவில் கோபால் சந்திரரின் குடும்பம் பெரும் பங்கு ஏற்கும். காசி மகாராசா நேராக வந்து அவ்விழாவில் பங்கு கொண்டு, இவ்விழாவினைச் சிறப்பிப்பார். "சேட் பத்தேஹ் சந்திரர் குடும்பத்திற்கும் இத் தெப்பத்திருவிழாவிற்கும் இடையே யுள்ள தொடர்பு, மணமகனுக்கும் அவனை அழைத்துச் செல்லும் திருமணக் கூட்டத்திற்கும் இடையே இருக்கும் தொடர்பினைப் போன்றது'' என்று அம்மன்னர் அடிக்கடி சொல்வாராம். அது உண்மையே. பழைய சம்பிரதாய முறைப்படி திருமணத்திற்கு அழைப்பு அனுப்புவது போன்று இவ்விழாவிற்கும் நாவிதர்கள் மூலம் அழைப்புக்கள் அனுப்புவார். அழைப்பினை ஏற்று வருபவர் கள் சிவந்த நிறத் தலைப்பாகையும், மேலாடையும் அணிந்து வருதல் வேண்டும். அவ்வாறு சிலர் வரத் தவறிவிட்டால் அவர் களுக்கெல்லாம் கோபால் சந்திரர் குடும்பம் அவைகளை விரும்பி வழங்கும். அது அக் குடும்பத்தால்தான் முடியும். அவ்வளவு செல்வம் படைத்தது அக் குடும்பம்.

கோபால் சந்திரரின் குடும்பம், எழுத்தாளர்களையும் கலைஞர்களையும் ஆதரித்து வந்தது. எந்த விழாவாயினும் அதற்கு விருந்தினர்கள் அழைக்கப்படுவர். விருந்தினர்களை அழைப்பதற்கு வாய்ப்புக்களைத் தேடிக்கொண்டிருப்பர். வசந்த விழாவின் போது விருந்தாளிகளும் விருந்து கொடுப்பவர்களும் மஞ்சள் நிற ஆடையில் தோற்றமளிப்பர். ஹோலி பண்டிகை யின்போது பல நிறப்பொடிகளைத் தூவித் தூவி மகிழ்வர். அது மக்கள் இனிதாக வாழ்ந்த காலம்; இந்திய வாழ்க்கை மெதுவாக, ஆனல் அழகாகச் சென்றது. எவ்வாறு, எப்படி வாழவேண்டும் என்ற அமைப்பைச் செல்வம் மிக்க கோபால் சந்திரரின் குடும்பம் போன்ற பண்பும் செல்வமும் மிக்க குடும்பங்கள் வாழ்ந்து வழிகாட்டின.

கோபால் சந்திரர் "கிர்தர் தாஸ்'' அவர்களுக்கு இரண்டு ஆண் மக்கள். அரிச்சந்திரர் 1850 செப்டம்பர் மாதம் பிறந்தார். பதினைந்து திங்களுக்குப் பிறகு கோகுல சந்திரர் பிறந்தார். பிற்காலத்தில் இளையவர் குடும்ப வியாபாரப் பொறுப்புக்களை ஏற்று நடத்தினர். மூத்தவர் இந்தி மொழியும் இலக்கியமும் வளர, வியக்கத்தக்க படைப்புகளையும் புதிய முறைகளையும் வகுத்துக் கொடுத்தார்.

1850-இல், அரிச்சந்திரர் பிறந்த அந்த நாட்களில், காசி நகரம் வாழ்க்கையை அனுபவித்தற்குரிய ஒரு சிறந்த இடமாக இருந்திருக்கவேண்டும். இந்தியாவின் பல இடங்களிலிருந்தும் மறுமை இன்பத்தை நாடிப் பயணிகள் பலர் வருவர். அவர்களோடு வியாபாரிகள் வருவர். ஏமாற்றுக்காரர்களும், போலிப் புலவர்களும், உழைக்காமல் வாழ்க்கையை அனுபவிக்க விரும்புகின்றவர்களும், டெல்லி மொகலாய அரசர்கள், அயோத்தி லக்னோ நவாப்புகள் இவர்களால் புறக்கணிக்கப்பட்ட பற்றுண்ணிகளும்—குறிப்பாக லக்னோ நகரத்தார்கள் காசியில் வந்து குவிந்தனர். அந்நகரம் சிறந்த கலைஞர்களுக்கும், புலமை மிக்க அறிவுடையோருக்கும், வைதீகர்—புரோகிதர் ஆகியோருக்கும் இடம் கொடுத்து வாழ்வளித்தது. காசி மகாராசா மட்டுமல்லாமல், நகரப் பிரமுகர் பலரும் கலைஞர்களையும், இசைப்புலவர்களையும் நடன மாதர்களையும், வேசியர்களையும் ஆதரித்துவந்தனர். சில நூறு மைல்களுக்கு அப்பாலுள்ள கல்கத்தாவில் என்ன நடக்கிறது என்ற அறிவில்லாமலே, காசி நகர வாழ்வு நடைபெற்று வந்தது. அங்கே, இராசாராம் மோகன்ராய் ஆரம்பித்த பிரம்ம சமாசம், புரட்சிக் கருத்துக்களால் நகரமக்களின் பரம்பரை சம்பிரதாய வாழ்க்கை முறைகளையும், சமுதாய மதிப்புகளையும் மாற்றும் ஒரு பெரிய சமூக மறுமலர்ச்சி இயக்கமாக உருவெடுத்துச் செயற்பட்டுக் கொண்டிருந்தது.

1848-இல் டெல்ஹவுசியின் வரவு, ஒரு சகாப்தத்தை முடித்தது. கிழக்கிந்திய கம்பெனி பஞ்சாபைச் சேர்த்துக்கொண்டது. இதனால் ஆங்கிலேயர் தம் பேரரசை இந்தியா முழுவதும் நிலை நாட்டும் முயற்சியில் வெற்றி பெற்றனர். ஆக்ராவிற்கும், கல்கத்தாவிற்கும் தந்தித் தொடர்பும் ஏற்பட்டது. டெல்லிக்கும் பாதைகள் போடப்பட்டன. ஆற்றுவழிப் பிரயாணப் பாதைகளும் உருவாயின. கல்கத்தா, பம்பாய், சென்னை ஆகிய நகரங்களில் பல்கலைக் கழகங்கள் நிறுவ நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. இந்து விதவைகளுக்கு மறுமண மசோதா நிறைவேறியது. இந்திய மக்கள் மேற்கத்திய நடை முறைகளைப் பின்பற்றத் தூண்டும் முயற்சிகள் வேகமும், வலுவும் பெற்றன. அனைவரும் இதனால் பாதிக்கப்பட்டனர்—கோபால் சந்திரர் உட்பட. "எனது தந்தை ஆங்கிலக் கல்வி பெறவில்லை என்றாலும், அவருக்கு எதிர்காலம் எவ்வாறு போகிறது என்பதைக் காண முடிந்தது. அவர் ஆழ்ந்த பற்றுடைய, நம்பிக்கையுடைய வைணவராயிருந்தும், புரட்சிகரமான சீர்திருத்தவாதியாகத் திகழ்ந்தார். சிறுதேவதை வழிபாட்டையும், விரதங்களையும் தவிர்த்தார். கவர்னர் தாம்சன் முதன் முதல் காசியில் பெண்களுக்குப் பள்ளிக்கூடங்கள் தொடங்கியதும்

என் தந்தையார் எனது உடன் பிறந்தாளை அதில் சேர்த்தார். அக்காலத்தில் அது மிகவும் புரட்சிகரமான செயல். பலர் என் தந்தையாரை ஏற இறங்க, இளக்காரமாகப் பார்த்தனர். எங்களுக்கும், முழுவதும் ஆங்கிலக் கல்வியையே நல்கினுர்." இவ்வாறு அரிச்சந்திரர் தன் தந்தையாரைப் பற்றி எழுதுகிருர்.

கோபால் சந்திரரின் குடும்பம், ஆங்கில அரசாங்கத்திற்கு மிகவும் விசுவாச முள்ளதாக இருந்தது. 1857-இல் ஆங்கில அரசு சிக்கலில் அகப்பட்டுத் தவிக்கும்பொழுது, காசியில் இருந்த ஆங்கிலப் பிரதிநிதி, தன்னிடமிருந்த அரிய பொருள்களை எல்லாம் பாதுகாப்பிற்காக கோபால் சந்திரரின் வீட்டிற்கு அனுப்பி வைத்தார். கோபால் சந்திரரின் குடும்பத்திற்கென அனுமதிக்கப் பட்ட 48 துப்பாக்கிகள், ஆங்கில அதிகாரிகள் ஒவ்வொருவருக்கும் பாதுகாப்பாக அமைந்தன. இதனுல், கோபால் சந்திரர் குடும்பம், காசி மகாராசாவின் அன்பிற்குரியதாக இருந்ததைப் போல, ஆங்கில அரசின் நன்றிக்கும் உரியதாக இருந்ததில் வியப்பெதுவு மில்லை.

## 3

1857 சுதந்திரப் போருக்கு ஏழு ஆண்டுகளுக்குமுன் பிறந்த அரிச்சந்திரர், பிஞ்சிலேயே பழுத்த பிள்ளையாகத் திகழ்ந்தார். அவர் மிகவும் சுட்டி. அக்கம் பக்கத்தார்க்கு மிகவும் தொல்லை கொடுத்து வந்தார். இரவில் அவர்கள் வீட்டுச் சுவர்களில் பாஸ்பரஸ் கொண்டு உருவங்கள் வரைந்து வீட்டாரைத் திடுக்கிடச் செய்து பயமுறுத்துவார்.

செல்வக் குடும்பத்தில் பிறந்த அரிச்சந்திரர், அக்கால மரபிற்கிணங்க பார்சீ, உருது மொழிகள் கற்பிக்கும் பள்ளிக்கு அனுப்பப்பட்டார். ஆங்கிலக் கல்விக்கும் ஏற்பாடு செய்யப்பட்டது. அவருக்கு ஆங்கிலம் கற்றுக்கொடுத்த ஆசிரியர் கள் ராசா சிவபிரசாத் 'சிதாரேஹிந்த், நந்தகிஷோர் முதலியோர். நந்தகிஷோர் பின்பு' லண்டனில் காலமானார். அரிச்சந்திரருக்கு வியக்கத்தக்க அளவு நினைவாற்றல் இருந்தது. அதற்குரிய சான்றுகள் பல.

அரிச்சந்திரர், தனது தந்தையாரின் இலக்கிய ஆற்றலைப் பெற்றிருந்தார். பிரஜ் மொழியில் எழுதப்பட்ட கவிகளை விளக்கவும், அதில் கவிதைகள் இயற்றவும் ஆற்றல் பெற்ருர், இவற்றிற்கு மேலாக "ரச" பாவங்களைப் புதிய முறையில் வகுத்துக் கொடுத்தார். அக்கால இலக்கிய வல்லுநர்கள் அவரது புதிய போக்கினை ஏற்றுக்கொண்டு அவரைப் பாராட்டினர்,

அச்காலத்தில் மக்கள் இளம் வயதிலேயே திருமணம் செய்து கொண்டனர். விரைவில் இறந்தும் போனார்கள். அரிச்சந்திரரின் முன்னோர்களில் பலர் பத்து அல்லது பன்னிரண்டு வயதில் திருமணம் செய்துகொண்டனர். கோபால் சந்திரரும் அப்படித் தான் திருமணம் செய்துகொண்டார். அவருடைய முதல் மனைவி, அரிச்சந்திரரின் தாய், சிறுவயதிலேயே இறந்துவிட்டார். அப்பொழுது அரிச்சந்திரருக்கு வயது ஐந்து. கோகுல் சந்திரருக்கு வயது மூன்றரை.

கோபால் சந்திரர் திரும்பவும் திருமணம் செய்துகொண்டார். விரைவிலேயே மக்கள் இருவருக்கும் பூணூல் திருமணமும் நடந்தது. மிகவும் சிறப்பாக அது நடைபெற்றது. இருபத்தேழு வயதுடைய கோபால் சந்திரர் நிறைய பாங்க் (போதைப் பொருள்) சாப்பிட்டார். அதனால் அவர் மரணமடைந்தார். தந்தையாரைப் பற்றி அரிச்சந்திரர் கூறுகிறார்.

"என் கண்முன் என் தந்தையை இப்பொழுதும் நான் காண முடிகிறது. நெற்றியில் பொட்டு; முதுகினை ஒரு பெரிய தலையணை யில் சாய்த்துக்கொண்டு அமர்ந்திருக்கின்றார். அவருடைய முகம் தெய்வீகப் பொலிவோடு காட்சியளிக்கிறது. நோய்வாய்ப்பட்ட வராகவே அவர் தோன்றவில்லை. என்னையும் என் உடன் பிறந்தானையும் ஒன்றாகக் கண்ட அவர் 'வகூரி விதியை மாற்றி விட்டது. நல்லது. "இப்பொழுது என்னைக் கொண்டுபோ!" எனத் திடீரென்று கூறினர்.

மக்கள் இருவரும் மிகவும் இளையவர். அவர்களுடைய சிறிய தாயார் மோகன் பீபியும் இளையவர்தான். குடும்ப மேற்பார் வையை அக் குடும்பத்திலுள்ள முதியவர் ஒருவர் ஏற்றுக் கொண்டார்.

ராணி கல்லூரியில் சேர்ந்த அரிச்சந்திரருக்கு அமைதி இல்லை. கட்டுப்பாட்டோடு வாழும் வாழ்க்கை அவருக்குப் பிடிக்கவில்லை. கோபால் சந்திரர் இறந்த பிறகு அவருக்கு எந்தக் கட்டுப்பாடும் இல்லாமற்போயிற்று. சிறிய தாயாரோ, மற்றவர்களோ அவரிடம் எத்தகைய அன்பும் காட்டவில்லை. கட்டுமீறிச் செலவு செய்யும் பொழுது அவர்கள் கண்டித்தனர். சிறிய தாயார் கஞ்சத்தனம் உடையவர். தெப்பத் திருவிழாவின்போது அவர் செய்வதாக ஒப்புக்கொண்ட சிறிய செலவினங்களைக்கூட அவர் தடுத்தார். எனவே அரிச்சந்திரர் கடன் வாங்கத் தொடங்கினர். பின்பு, வாங்கிய கடனுக்குப் பெருந்தொகை கொடுக்கவேண்டி வந்தது. அரிச்சந்திரர் தனிமையாகத் தவித்ததில் வியப்பில்லை,

அரிச்சந்திரருடைய தொல்லைகளை மேலும் பெருக்குவது போல, பதினோராவது வயதில் அவரைத் திருமணம் செய்ய வற்புறுத்தினர். இளம் வயதுத் திருமணந்தான். ஆனால், அவருடைய தந்தையும், பாட்டனும் அப்படித்தானே திருமணம் செய்து கொண்டார்கள்.

திடீரென்று அரிச்சந்திரர் பள்ளியை விட்டுவிட்டார். திருமணம் அவருக்குப் புதிய பொறுப்புக்களையும், புதிய துறைகளில் சிந்தனைகளையும் தூண்டியது.

சிறிது நாட்களுக்குப் பிறகு பூரி ஜெகந்நாதர் ஆலயத்திற்குப் பயணமானார். இப்பயணம் அவருக்குப் புதிய வழிகளைத் திறந்து காட்டியது. அவருக்குப் பிரயாணம் செய்யவேண்டும் என்ற ஆவல் பெருகியது. பிற்காலத்தில் அவர் அடிக்கடி பெரும் பயணங்களை மேற்கொண்டார்.

திரும்பவும், அவர் கல்வியின் இன்றியமையாமையை உணர்ந்தார். இதனால் தன் வீட்டிலேயே ஏழைகளுக்குப் பள்ளிக் கூடம் ஒன்றைத் தொடங்கினார். அங்குப் படிக்கும் மாணவர்களுக்குப் புத்தகங்களும் மற்ற தேவைகளும் இலவசமாகக் கொடுக்கப்பட்டன. பள்ளிக்குக் கட்டணம் எதுவும் கிடையாது.

# 4

குடும்பப் பொறுப்பை ஏற்று நடத்த ஆரம்பித்ததும் அரிச்சந்திரருக்கு இன்னும் கட்டுப்பாடில்லாமல் செலவு செய்ய வாய்ப்பு மிகுந்தது. இப்பொழுது எத்தகைய கவலையும் இல்லாமல் பணத்தைச் செலவு செய்ய ஆரம்பித்தார்.

ஆசைகளை அடக்க முடியாத அளவு ஆடம்பரமாகச் செலவு செய்தார். வாசனைப் பொருள்கள், கண்ணைப் பறிக்கும் விலையுயர்ந்த பட்டு ஆடைகள் இவற்றில் அவருக்கு விருப்பம் அதிகம். மொகலாய மன்னர்கள், அயோத்தி, லக்னோ, நவாப்பு இவர்களுடைய ஆதரவினை இழந்த வாசனைப்பொருள் வியாபாரிகள், இப்பொழுது அரிச்சந்திரரைப் போன்றவர்களை நாடினர். அரிச்சந்திரரின் வீட்டிற்கு வந்த இவர்கள், வெறுங்கையோடு எப்பொழுதும் சென்றதே இல்லை. கை நிறைய பணத்தோடு சென்றனர். வாசனைப் பொருள்களைத் தேவைக்கு அதிகமான அளவு வாங்கி அவற்றை வேண்டாத முறைகளில் எல்லாம் பயன்படுத்தினர். வெற்றிலைக்கே அவருக்கு மிகுதியான வாசனைப் பொருள்கள் வேண்டியிருந்தன. ஒரு நாளைக்கு நூற்றுக்கணக்கான வெற்றிலைகள் அவருக்குத் தேவைப்பட்டன. அவர் சுவாசிக்கும் பொழுது வெளிவரும் நறுமணம், வாசனைத் தைலம் வடிக்கும்

இடத்திலிருந்து வரும் வாசனையைவிட அதிகமாக இருக்குமாம். இளவரசனைப் போல ஆடைகள் அணிந்தார். அவர் விரும்பியவற்றை அடைவதற்கு உதவி செய்தவர்களுக்கு வேண்டிய நன்மைகளைச் செய்தார். வாசனைப் பொருள் வியாபாரிகளையும் பட்டு வியாபாரிகளையும் மிகவும் ஆதரித்தார்.

அருமையான படங்களையும், பழமையான நூல்களையும் கையெழுத்துப் பிரதிகளையும் கொண்டுவந்து அவரிடம் விற்றனர்கள். எண்ணமுடியாத பெருந்தொகையைக் கொடுத்து அவைகளை வாங்கித் தன் தந்தையார் விட்டுச்சென்ற நூலகத்தில் சேர்த்தார். கலைகளைக் காப்பதும், கலைஞர்களை ஆதரிப்பதும் ஆகிய தன் குடும்ப பரம்பரை இயல்பைப் பாதுகாப்பதில் தன் செல்வத்தை எவ்வளவு செலவு செய்யவும் அவர் தயங்கவில்லை. காசிக்கு வந்த முக்கியமான மனிதர் யாராயினும்—இந்தியராயினும், வெளி நாட்டினராயினும், அரிச்சந்திரர் வீட்டிற்கு வரத் தவறமாட்டார். வந்தால் தன் குடும்ப பெருமையைப் பாதுகாக்கும் முறையில் அவர்களுக்கு விருந்து நடக்கும்.

புதிதான எதுவும் அவரைக் கவரும். கைக்கடிகாரம் அவருக்கு மிகவும் பிடிக்கும். மொத்தமாக வாங்கி நண்பர்களுக்கும், தன்னைச் சுற்றித் திரிபவர்களுக்கும் கொடுப்பார். புகைப்படம் அப்பொழுதுதான் இந்தியாவிற்கு வந்தது. அரிச்சந்திரருக்கு அதில் ஈடுபாடு ஏற்பட்டது. பலருக்கும் பொருள் கொடுத்துப் புகைப்படம் எடுக்கும் தொழிலைத் தொடங்கச் செய்தார். ஹோமியோபதி வைத்தியமும், அதுபோல் புதிய ஒன்று. அது அரிச்சந்திரரைக் கவர்ந்தது. இலவசமான ஹோமியோபதி மருத்துவமனை ஒன்றை நிறுவி, மாதம் நூற்றிருபது ரூபாய் அதற்காகச் செலவு செய்தார்.

லித்தோ அச்சுமுறை அப்பொழுதுதான் காசிக்கு வந்தது. தனது தந்தையாரின் நூல்களை இந்த முறையில் பதிப்பித்தார். "சுந்தரி திலகம்" என்ற தலைப்பில் சிறந்த ஆசிரியர்கள் பாடிய கவிதைத் திரட்டொன்றைப் பதிப்பித்தார். அச்சு இயந்திரமும் அப்பொழுதுதான் காசிக்கு வந்தது. அதில் ஈடுபாடு கொண்ட அவர், நண்பர் பலருக்கும் பொருளுதவி செய்து அச்சகம் நிறுவத் தூண்டினர். புதியது எதுவாயினும் அதற்கு அவருடைய உதவி கிடைக்கும். அகராதி தொகுப்பதோ, மல்யுத்தம் நடத்துவதோ, மாய வித்தை காட்டுவதோ எதுவாயினும் அதற்கு அவர் உதவி கிடைக்கும். ஏழை என்று வந்து கேட்டால் தன் சட்டைப் பையில் இருப்பதை, தன்னிடம் இருப்பதை அப்படியே கொடுத்து விடுவார். விலை உயர்ந்த மோதிரங்களோ, வைரங்களோ எதுவாக இருந்தாலும் கொடுத்துவிடுவார். ஒரு சமயம் குளிரில்

காய்ந்துகொண்டிருந்த பிச்சைக்காரன் ஒருவனுக்கு விலையுயர்ந்த போர்வையைக் கொடுத்தார். ஏழை அந்தணன் ஒருவன் வந்து கேட்டபொழுது தன்னிடம் இருந்த வைரமோதிரத்தைக் கொடுத்தார். ஒருவர், அரிச்சந்திரரிடம் இருந்த தங்கப்பெட்டியை விரும்பித் தன் மகனுக்காகக் கேட்டபொழுது கொடுத்துவிட்டார்.

சோம்பேறிகளும், பிறர் உழைப்பால் வாழ்கின்றவர்களும், முகமன் பாடுகின்றவர்களும் அவருடைய சபலங்களை அறிந்து அவற்றிற்குத் தீனி கொடுத்து, அதனால் அவர் நன்மையை நாடுபவர்கள் போல் நடித்து, அழகும், இளமையும், மிகுந்த செல்வமும் படைத்த அவரைச் சூழ்ந்து வாழ்ந்தனர்.

இந்தி மொழியில் வந்த முதல் சுயசரிதைக் கட்டுரையில், அரிச்சந்திரர், ஒரு இளம் கலைஞனின் வாழ்க்கையை விளக்குவது போல் தன்னைச் சூழ்ந்து வாழ்ந்து மறைந்தவர்களைப் பற்றிக் கூறுகிறார். இதனால் அவர் வாழ்ந்த காலச் சூழ்நிலைகளையும் நாம் அறிந்துகொள்ள முடிகிறது.

> நான் இளவேனிலில் சுகத்தையும் காற்றையும் அனுபவித்துக்கொண்டு ஜன்னலருகே இருந்தேன். இருட்ட ஆரம்பித்தது. ஒரு பக்கம் சூரியன்; மறுபக்கம் சந்திரன். இரண்டும் இளஞ் சிவப்பு; அது ஒரு வியக்கத்தக்க காட்சி.
>
> கரும்பு விற்பவர்களும், 'கசரு' விற்பவர்களும், பூ வியாபாரிகளும் விலை கூவிக்கொண்டு தெரு வழியே சென்றனர். என் இளமைக் கனவில் என்னையே மறந்தேன். காலத்தின் மேடு பள்ளங்களை மறந்தேன். காதல் உணர்வும் போக வாழ்வும் என்னை ஆட்கொண்டன. நான் சோம்பேறிகளாலும், பொய்யர்களாலும் சூழப்பட்டிருந்ததாலும், அவர்கள் என்னைப் புகழ்ந்து பாடிக்கொண்டிருந்ததாலும், உண்மை அன்பு எங்கே இருக்கிறது என்பதை என்னால் உணர முடிந்தது. "உங்களைப் போன்ற அழகுடையவர் எங்குமே இல்லை" என்றார் ஒருவர். "தங்களைப் போன்ற கல்விமேதை வேறொருவரை நான் கண்டதேயில்லை" என்றார் மற்றொருவர். கணிகை சேமலி ஜான் உங்களிடம் மயங்கி இருக்கிறாள். நீங்கள் இன்றி அவள் வாழமுடியாது" என்றார் மற்றொருவர். "கடவுளே! தாங்கள் எழுதிய கவி எவ்வளவு மேலானது. எங்களை அது உலுக்கிவிட்டது. நேற்று இரவு முழுவதும் அழுதுகொண்டே இருந்தோம்" என்றார் ஒருவர். உடனே மற்றொருவன் "பியாரி தங்களுடைய கஜல் பாடல்

ஒன்றைப் பாடியபொழுது கேட்டோர் அனைவரும் விழுந்து விழுந்து நகைத்தார்கள். சிரித்து சிரித்து அவர்கள் வயிறே புண்ணாயிற்று" என்றார். "நீங்கள் கொடுத்து வைத்தவர்கள்" நீங்கள் வியக்கத்தக்க மனிதர். எங்கள் உள்ளத்தைத் திறந்து கொட்டவே முடியவில்லை" என்றார் மற்றொருவர். "உங்கள் கைமோதிரத்தில் இருப்பது என்ன, வைரமா அல்லது தூய பனித்துளியா? என்றான் மற்றொருவன். மிர்சாகிப் பறவைகளை விரும்புகிறவர். ஆனால் அவர் கூறுகிறார் "உங்கள் புறாக்களைவிட உயர்ந்த ரகப் புறாக்கள் எவரிடமும் இல்லை. கடவுளே! உங்களிடம் உள்ளவை புறாக்களா அல்லது வானுலக கன்னிகைகளா? இவைகளின் நிழல் நமது புராணங்களில் வரும் ஹுமாக்களின் மேல் விழுமானால்? அவைகள் கழுகுகளாக மாறி விடும்.........கிறித்தவர்கள் கடவுளின் உருவத்தையே இத்தகைய அழகுப் பொருள்களில்தான் காண்கிறார்கள். அவை உயர உயர பறந்து செல்லும்பொழுது, நமது ஆர்வம் இந்த உலகிலா இருக்கின்றது. நான் கடவுளின் பேரில் சபதம் செய்வேன். மட்டியாபுர்ஜ்காரர்கள் ஒருக்காலும் இத்தகைய பறவைகளைத் தங்கள் கனவிலும் கண்டிருக்க முடியாது" என்பான் ஒருவன். என்னுடைய குதிரைகளைப் புகழ வந்தார் ஒருவர்; நகை வியாபாரி எனது குதிரைகளைப் புகழ்ந்தார். துணிக்கடை வியாபாரி என் பூந்தோட்டத்தைப் புகழவந்தார். "பூசைக்காகச் சில பூக்களைப் பறித்தேன்" என்றார். இந்தப் புகழ்ச்சிகளெல்லாம் என்னையே மையமாகக் கொண்டன. இந்தப் புகழ்ச்சி, பாராட்டு இவைகளால் அழுத்தப்பட்டு புதைக்கப்பட்டிருப்பேன். நல்லகாலம், இவைகளெல்லாம் விரைவில் என்னைவிட்டு விலகின. இவைகளெல்லாம் எனது அறையின் உள்ளேதான் நிகழ்ந்தன.

மாடிப்படிக்கு வருவோம். அங்கு நான்கு அல்லது ஐந்து இந்துக்கள்; அத்தனை மகமதியக் காவலாளிகள்; ஒரு ஜமேதார்; வேலை தேடி வந்திருக்கும் இரண்டு மூன்று பேர்; ஒரு இருபது மந்த புத்தியுடையோர். இவர்களில் சிலர் உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள். சிலர் நிற்கிறார்கள். ஆனால் ஒவ்வொருவருக்கும் பணம் வேண்டுமாம்.

இவர்கள் அனைவரும் இப்படிச் சுயநலவாதிகளாக இருந்தனர் என்று கூறமுடியாது. சிலர், மிக அருமையாகச் சிலர், எனக்கு, அவர்களுடைய எசமானனாகிய

எனக்கு, உண்மையாக இருந்தனர். கயவன் ஒருவனோடு, மற்றொருவன் பேசிக்கொண்டிருந்தான், "எனக்கு ரூபாய்க்கு இரண்டணா கொடு. இல்லையானால் உன்னைப் பற்றி இழிவாகச் சொல்லி இங்கே பிபி ஜான் தர்பாருக்கு செல்ல முடியாதவாறு செய்துவிடுவேன்". மற்றொருவன் வியாபாரியிடம் கூறிக்கொண்டிருந்தான் "உன்னிடம் இருக்கும் அந்த கருத்த நிறமுடைய போர்வையை எனக்குக் கொடு. இல்லையானால், ஆண்டுக்கணக்காக நீ, இங்கே காத்துக் கிடந்தாலும் உனக்கு வரவேண்டிய பணம் வராது. அது மட்டுமில்லை; இங்கிருந்து ஒரு தூசி கூட உனக்குக் கிடைக்காது."

வேறொருவன், தரகன் ஒருவனோடு பேரம் பேசிக் கொண்டிருந்தான். மற்றொருவன் தனது எஜமானனு டைய நம்பிக்கைக்கு உரியவன் தான் ஒருவனே, வேறு எவரும் இல்லை என்ற மகிழ்ச்சியில் மூழ்கி இருந்தான். (யார் கடன் பெற்றாலும் அவன் மூலமாகவே பெற்று வந்தனர்.)

வேறொவன் "எவ்வளவு தைரியம் இருந்தால் நீ என் கண்முன் விழிப்பாய்? பெண்களுக்குக் கொடுக்கப்படுவ தெல்லாம் என் மூலமே கொடுக்கப்படுதல் வேண்டும்" என்றான்.

இவர்களிடையே (அரிச்சந்திரர் ஒரு குறிப்பினைக் கொடுக்கிறார்) உண்மையில் நம்பிக்கையாக, உதவியாக இருப்பவன் ஒருவனைக் கண்டுபிடிக்க முயலவேண்டும். அவன் குர்மி சாதியினன்; கருமை நிறமுடையவன்; நடுத்தர உடம்புடையவன்; அவன் கைகள் உருண்டு திரண்டிருக்கும்; பெரிய மீசை; சிறிய கண்கள்; கந்தை உடைகள்; சிவந்த தலைப்பாகை; பச்சைநிற இடுப்புக் கட்டு; வெண்மையான மேலாடை—இவைகளை அணிந் திருந்தான். இவன் பெயர் ஹோலி. இப்பொழுது என்னோடு தொடர்பு கொண்டு செயற்பட விரும்பு கின்றவர் அனைவரும் இவன் உதவியை நாடுகின்றனர்.

அரிச்சந்திரருடைய மனைவி, மன்னோதேவி, இவருக்கு இரண்டு ஆண் பிள்ளைகளையும், ஒரு பெண் மகவினையும் பெற்றுக் கொடுத் தாள். இரண்டு பையன்களும் பிள்ளைப் பருவத்திலேயே இறந்து போய்விட்டனர். உயிர் வாழ்ந்த மகள், நோய்வாய்ப்பட்டிருந் தாள். அவள் தலை ஒரு பக்கம் சாய்ந்திருக்கும். அவருடைய திருமண வாழ்வு சிறிதுகூட மகிழ்ச்சியாக இல்லை. அரிச்சந்திரரு டைய குடும்ப வைத்தியராகிய ஒரு புகழ்பெற்ற ஹோமியோபதி

மருத்துவர் (இவர் அரிச்சந்திரர் வீட்டில் பெண்கள் தங்கும் அறை வரையிலும் சென்று பழகும் உரிமையுடையவர்) மன்னுே தேவி யின் நோய்க்கு அவளுடைய கணவனின் நிராகரிப்பு, பொறுப்பற்ற தன்மை இவற்ருல் ஏற்பட்ட சோர்வும் மனத்தளர்ச்சியுமே காரணம் என்கின்ருர்.

இந்த இக்கட்டான செய்தியைப்பற்றி அரிச்சந்திரரோடு நேராகப் பேசுவதைவிட அவருக்குக் கடிதம் மூலம் தெரிவிப்பதே நன்றெனக் கருதிக் கடிதம் எழுதினுர். வங்காள மொழியில் எழுதப்பட்ட அக் கடிதத்தைப்பெற்ற அரிச்சந்திரர் வங்காள மொழியில் (தேவ நாகரி எழுத்துக்களில்) எழுதிய பதில் கடிதத் தில், தனக்கு இல்லற வாழ்வில் எந்த மகிழ்ச்சியும் இல்லை எனவும், தான் தன் மனைவிக்கு எந்த விதமான குறைகளும் இல்லாமல் பார்த்து வருவதாகவும், அவள் வாழ்வுக்கு வேண்டிய எல்லா வசதி களையும் செய்து கொடுத்திருப்பதாகவும், தன் மனத்தைத் தன்னுல் அடக்க முடியவில்லை எனவும், அதனுல், தான் செயலற்று இருப்பதாகவும் எழுதி இருந்தார்.

ஆயிரத்து எண்ணூற்று எழுபதுகளின் தொடக்கத்தில், காசியி லுள்ள செல்வச் சீமான்கள் தோட்டவீடு கட்டிக்கொள்வதிலும், அனேக நாட்டியப் பெண்களை வைப்பாட்டியாக வைத்துக் கொள் வதிலும் பெருமை கொண்டாடினர். இதிலும் அரிச்சந்திரரை மிஞ்சுபவர் எவரும் இல்லை. இத்தகைய ஒழுக்கமற்ற வாழ்க்கையை முழுக்க முழுக்க அனுபவித்தார். அவருடைய குடும்பம் கூட்டுக் குடும்பமாக இருந்தமையால், அரிச்சந்திரருடைய மனைவியையும் மகளையும் மற்றையோர் கவனித்துக் கொண்டனர். அவருக்குக் குடும்பப் பொறுப்பில்லை. அதனுல் இன்பத்தைத் தேடி வேறு இடங் களுக்குச் சென்றார்.

நாட்டியப் பெண்களின் வீடுகளுக்குத் தவருமல் செல்வார். அவர்களும் இவருடைய தோட்ட வீட்டிற்கு அடிக்கடி வருவார் கள். இவர்களைத்தவிர, நிரந்தரமான இரண்டு பெண்களை வைத் திருந்தார். இவர்கள் இருவரும் அரிச்சந்திரருடைய இலக்கியப் படைப்பிற்குப் பெரிதும் காரணமாக இருந்தனர். அவர்களில் அலி ஜான் ஒருவர். அவள் பணம் கடன் வாங்குவதற்காக முதலில் கோகுல் சந்திரர், அரிச்சந்திரர் இவர்களுடைய வீட்டிற்கு வந்தாள். அக் கடனுக்கு ஈடாக, கோகுல் சந்திரருக்குத் தன் வீட்டைக் கொடுத்தாள். அரிச்சந்திரரோடும் நட்பு ஏற்பட்டது. இக்கட்டான ஒரு சூழ்நிலையில் அவள் முகமதிய மதத்தைத் தழுவி, வேசியாக வாழ்ந்தாள். அரிச்சந்திரர் அவளைத் திரும்பவும் இந்து மதத்திற்கு மாற்றித் தன் வைப்பாட்டியாக வைத்துக்கொண்டார். அவளுக்கு மாதவி என்று பெயர் கொடுத்தார். வீட்டைச்

கடனுக்காகக் கொடுத்த நாட்களைக் கொண்டும், வட்டித் தொகையைக் கணக்கிட்டும் பார்த்தால், இவள் அரிச்சந்திரர், கோகுல் சந்திரர் இவர்களை 1870-தை அடுத்துச் சந்தித்திருக்கவேண்டும். அப்பொழுது அவளுடைய அழகில் ஈடுபட்டு அவளோடு நெருங்கிய தொடர்பு கொண்டு, அரிச்சந்திரர் அவளைத் தனது வைப்பாட்டியாகக் கொண்டிருக்க வேண்டும். அவள் வீட்டில் கச்சேரிகள் நடத்தி அங்கேயே பல இரவுகளைக் கழித்தார். தாகூர்ஜியின் சிலை, அழகான சித்திரங்கள், தந்தத்தினுலான சிற்பங்கள் இவைகளால் அவள் வீட்டை அழகு படுத்தினர். அரிச்சந்திரர் இறந்த பின்பு கோகுல் சந்திரர் இவைகளை எடுத்துக்கொண்டு மாதவிக்கு மாதம் பத்து ரூபாய் கொடுத்து வந்தார். கோகுல் சந்திரர் இறந்தபின்பு அதுவும் நிறுத்தப்பட்டது.

சில ஆண்டுகளுக்குப் பின்பு, வங்காள விதவை ஒருத்தி, மல்லிகா, அரிச்சந்திரரின் வாழ்வில் இடம் பெற்றுள். அவளிடம் சிறிது இலக்கிய ஆற்றலும் இருந்தது. கவிகள் எழுதுவாள். மூன்று வங்காள நாவல்களை இந்தி மொழியில் மொழி பெயர்த்தாள். அரிச்சந்திரரின் இலக்கியப் பணிக்கு மிகவும் உதவியாக இருந்தாள். பதிப்பகம் ஒன்றைத் தொடங்கி, அதன் மூலம் அரிச்சந்திரரின் நூல்களை விற்பனை செய்தாள். அவள் மொழி பெயர்த்த நூல் ஒன்றன் முகவுரையில் அரிச்சந்திரர் தூண்ட அந்த நூலை மொழி பெயர்த்ததாகக் கூறுகிருள். அவருக்கே அந்த நூலையும் படையல் செய்தாள். அவளுடைய நூல்களை அரிச்சந்திரர் திருத்தி வெளியிட்டார்.

அரிச்சந்திரரின் உல்லாசமான கேளிக்கை வாழ்க்கை அவருக்கு 'பாரதேந்து' என்ற பட்டப்பெயரைக் கொடுத்தது. அதைப்பற்றிக் கதை ஒன்று கூறுவர். ஒரு சமயம், அரிச்சந்திரர், வயது முதிர்ந்த சில கிழவர்களின் உல்லாசப் போக்கைச் சுட்டிக்காட்டிப் பரிகாசம் பண்ணிக்கொண்டிருந்தார். அப்பொழுது அரிச்சந்திரரின் நண்பர்கள், "உங்களுடைய வாழ்க்கையும் அப்படி ஒன்றும் பரிசுத்தமாக இல்லையே" என்று சுட்டிக்காட்டி, அது சந்திரனிடம் காணப்படும் களங்கம் போன்றது என்றனர். அவரைப் பரிகசித்து நீங்கள் பாரதேந்து—இந்திய சந்திரன், என்றனர். அரிச்சந்திரர் தான் அதைப் பற்றிக் கவலை கொள்ளவில்லை என்று கூறிவிட்டார். அவருடைய நண்பர்கள் பாரதேந்து என்பதை அவர் பெயரின் முன்பு இணைத்து அவரை அழைத்தனர். அதுவே நிலைத்துவிட்டது. 1870-களின் பிற்பகுதியில், இந்தி இலக்கிய வளர்ச்சியில் அரிச்சந்திரரை ஆங்கிலேய அரசு பெருமைபடுத்த வேண்டும் என்று அவருடைய நண்பர்கள் பலர் முயன்றனர். ஆங்கில அரசு அதனைப் பொருட்படுத்தவில்லை. அவருடைய நண்பர்கள்

வருந்தினர். அதிலும், இவருக்குப் போட்டியாக ராஜாசிவ பிரசாத் "சிதாரே ஹிந்த்" (இந்தியாவின் நட்சத்திரம் என்பவரே) ஆங்கில அரசின் அன்பிற்குரியவராக விளங்கினார். அரிச்சந்திரரின் நண்பர்களில் ஒருவர், 'சாரசுதா நிதி' என்ற இதழின் ஆசிரியர், அரசு அவரை மதிக்காவிட்டாலும், ஹிந்தி உலகம் அவருக்கு 'பாரதேந்து' என்ற பட்டத்தை நல்கிப் பாராட்ட வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தார். இதை அனைவரும் உடனேயே ஏற்றுக் கொண்டனர். அன்று முதல், பாரதேந்து என்ற பெயர், அவர் பெயரோடு ஒட்டிக்கொண்டது. ஜார்ஜ் கிரயர்ஸன், கார்கொான் தாசி போன்ற வெளிநாட்டுப் பேராசிரியர்களும், பாரதேந்து என்ற பெயராலேயே அவரைக் குறிப்பிடுகின்றனர். அரிச்சந்திரருக்கும் இப்பெயர் மிகவும் பிடித்திருந்தது. தனது கடிதத்தாளில், உதய சந்திரனைத் தனது முத்திரையாக அச்சடித்து வைத்துக்கொண்டார்.

## 5

'பாரதேந்து' என்ற பட்டத்தை அரிச்சந்திரர் மிகவும் பெருமையாக ஏற்றுக் கொண்டார். புராண மன்னன், அரிச்சந்திரன் எந்தத் துன்பத்தின்போதும் உண்மையையே பேசி வந்தவன். அவன் பெயர் தனக்கு இருப்பதிலும் பெருமை கொண்டார். அவனைப் போல, ஒரு அரசனைப் போன்ற பெருந்தன்மையோடு, பெருமிதத்தோடு மட்டுமன்று, எவ்வளவு சிக்கலிலும் உண்மைக்காகவே வாழ்ந்தார். அடிக்கடி சொல்லப் படுகின்ற கதை இது. சையத் அகமத் கான் (இவர்தான் பின்பு அலிகார் பல்கலைக் கழகத்தைத் தோற்றுவித்தார்) சிறு காரண நீதிமன்றத்தின் (Small case court) நீதிபதியாகப் பதவி உயர்வு பெற்று, காசிக்கு மாற்றப்பட்டார். அவர் பரிசீலனைக்கு வந்த வழக்கொன்றில் இளம் வயதினரான அரிச்சந்திரர் வாதி. அரிச்சந்திரருக்குத் தனது படகினையும் விற்று, கடனும் கொடுத்த ஒரு வியாபாரி பெற வேண்டிய மூவாயிரம் ரூபாயைப் பற்றிய வழக்கு அது.

மேல் மட்ட வகுப்பைச் சார்ந்த வாதி மற்ற வாதிகளிலிருந்து வேறுபட்டுக் காணப்பட்டார். நீதிபதி அகமத்கான், அவரைத் தனியாக அழைத்து, உட்காரச் செய்து "இப்பொழுது சொல்லுங்கள்; அந்த வியாபாரி உங்களுக்குக் கொடுத்த படகின் உண்மை விலை என்ன?" என்றார். "நான் பிராமிசரி நோட்டில் குறிப்பிட்டதுதான்." என்றார் இளைய அரிச்சந்திரர். "அவரிட

மிருந்து எவ்வளவு பணம் பெற்றீர்கள்?" "அந்த பிராமிசரி நோட்டில் குறிப்பிட்ட முழுத்தொகையையும்".

சையத் அகமத் கானுக்கு அதிர்ச்சியாக இருந்தது. புருவங்களைச் சுழித்தார். "பாபு சாகிப்! தாங்கள் ஒரு வேளை மறந்திருக்கலாம். வெளியே போய்க் காற்று வாங்கிக்கொண்டு வந்து தெளிந்து உண்மையைச் சொல்லுங்கள்" என்றார்.

இளைஞர் நீதிமன்றத்தின் வெளியே சென்றார். இந்த வாய்ப்பினைப் பயன் படுத்திக்கொண்டு, சில நூறுகள் கொடுத்து இந்தச் சிக்கலிலிருந்து விடுபடுமாறு அவருடைய நண்பர்கள் அறிவுரை கூறினர். அவர்கள் சொல்வதை அரிச்சந்திரர் ஒன்றும் பேசாமல் அமைதியாகக் கேட்டுக்கொண்டிருந்தார்.

திரும்பவும் நீதிமன்றத்திற்கு வந்தபொழுது, முன்பு சொன்னதையே இப்பொழுதும் சொன்னார்.

சையத் அகமத், இந்த இளம் மேற்குடிமகன், தான் குறிப்பாகச் சொன்னதை உணர்ந்து கொள்ளவில்லை என்று நினைத்து, தான் முன்பு சொன்னதைத் திரும்பவும் கூறினார். ஆனால் அரிச்சந்திரர் தன் மதக்கோட்பாடுகளையும் உண்மைகளையும், பணத்திற்காகப் பலியிட முடியாது என்று வெளிப்படையாகக் கூறிவிட்டார்.

"அந்த வியாபாரி, என்னை அந்த பிராமிசரி பத்திரம் எழுதும் புடி வற்புறுத்த வில்லை. அவர் கூறியவற்றிற்கு நானே உடன்பட்டு, அவருக்குக் கொடுக்க வேண்டிய தொகையை ஒத்துக்கொண்டு விட்டு, இப்பொழுது அத்தொகையைக் கொடுக்க வேண்டிய நிலை வரும்பொழுது, கொடுத்த வாக்கை மீற முடியுமா? என்றால் முடியாது. என் பெயர் அரிச்சந்திரர். உண்மைக்கே உரிய சொல் அது" என்று கூறினார்.

ஒரு இந்தி எழுத்தாளர் கூறுகிறார் "இது சையத் அகமத் கான் உள்ளத்தில் பெரும் நல்லெண்ணத்தை உண்டாக்கிற்று. மற்ற வழக்குகள் வந்தபொழுது இந்த வாதிக்காக சாட்சிகளைக் கேட்கமாட்டார். வாதி சொல்வதை அப்படியே ஏற்றுக் கொள்வார். இம் மனிதர் உண்மையுள்ளவர் என்பதில் எங்களுக்கு ஐயமே இல்லை. இவரைப் பொறுத்தவரையிலும் அவர் சொல்வதை அப்படியே ஏற்றுக் கொள்வோம். அவருக்காக சாட்சிகள் வேண்டியதில்லை என்றார் சையத் அகமத் கான்.

இது தனித்த ஒரு நிகழ்ச்சியன்று. இதைப் போன்று, அரிச்சந்திரர் தான் பெற்ற சிறுதொகைக்குப் பெருந்தொகை

களைப் பலமுறை கொடுத்து தான் சொன்ன சொல்லைக் காப்பாற்றி இருக்கின்றார்.

அரிச்சந்திரரின் திருமணம் முடிந்தவுடன் குடும்பம் பூரி ஜகந்நாத்துக்குத் திருத்தலயாத்திரை செல்வதாக முடிவு செய்தது. அப்பொழுது கோபால் சந்திரரின் நண்பர் ஒருவர் அரிச்சந்திரரிடம் வந்து இரண்டு தங்க நாணயங்களைக் கடனாகக் கொடுத்தார். தனக்குக் கடன் தேவையில்லை என்று கூறியும், அவர் விடவில்லை. சிறிய தாயாரின் கொடுமைகட்குட்பட்டவர்களுக்கு உதவி செய்பவர் போல் பாசாங்கு செய்து, இரண்டு தங்க நாணயங்களை எதற்கும் ஒரு உதவிக்கு வைத்துக்கொள்ளுமாறு வற்புறுத்தினார். அரிச்சந்திரரும் ஏற்றுக்கொண்டார். அந்தக் காலத்தில் பூரிக்குப் பாதி வழிதான் ரயிலில் பிரயாணம் செய்யமுடியும். மற்ற பாதி வழியையும் மாட்டுவண்டி போன்றவைகளில்தான் பிரயாணம் செய்து பூரியை அடைய வேண்டும். இதனால் இது ஒரு பெரும் பயணமாகவே அக்காலத்தில் கருதப்பட்டது. கையில் பணம் இருந்தமையால், வழியில் ஒரு சச்சரவின் காரணமாக, அரிச்சந்திரர் காசிக்குத் திரும்பிவிட்டார். இரண்டு பொற்காசுகளும் செலவாயின. இதனை உணர்ந்ததும், காசியிலேயே அவரைத் தங்குமாறு உறவினர்கள் கூறிவிட்டனர். பிற்காலத்தில் அந்த இரண்டு பொற்காசுகளுக்காகப் பதினையாயிரம் ரூபாய் விலை மதிப்புள்ள வீடு ஒன்றையே கொடுக்க வேண்டியநிலை ஏற்பட்டது.

சிக்கல்களுக்கு எல்லாம் அரிச்சந்திரர்தான் பெருங்காரணம். தொல்லைகள் எல்லாம் அவருக்குக் கடன் கொடுப்பவர்களால்தான் வருவன என்று கூறிவிடமுடியாது. அரிச்சந்திரர் மிகவும் தாராள மனப்பான்மை உடையவர். களியாட்ட வாழ்வில் மிக ஈடுபாடு கொண்டவர். இலக்கிய படைப்பிலும், இலக்கிய ரசனையிலும், ஈடுபட்டவர். பொருள் ஈட்டுவதிலும், சிக்கனச் செலவிலும் சிறிதும் நாட்டம் இல்லாதவர். அவருடைய குடும்ப மூதாதையர், வியாபாரத்தால் பெரும்பொருள் ஈட்டி வைத்தனர். அப்பொருள்கள் எல்லாம் கரையத் தொடங்கின. வருவாய் எதுவும் இல்லை. அக் குடும்பத்தின் நண்பர்களும், உறவினர்களும், காசி மன்னனை அணுகி, அவ்வரசனுக்கே பொருள் கொடுத்துதவும் இக்குடும்பம், பணவிரையம் செய்வதைத் தடுக்குமாறு வேண்டினர். மன்னர் அரிச்சந்திரரை அழைத்து, அவர்கள் கூறியவற்றைக் கூறி வேண்டாத செலவீனங்களைத் தவிர்க்குமாறு வேண்டினார். அந்த இளம்பிள்ளை, அரிச்சந்திரர், தனக்குப் பொருளில் நாட்டம் இல்லை என்பதை வெளிப்படையாகக் கூறிவிட்டார். "இந்தச் செல்வம் அன்று எனது மூதாதையர்களைத் தின்று அழித்தது. நான்,

அதைத் தின்று அழிப்பதாக முடிவு செய்துவிட்டேன்'' என்று பதில் கூறினார். /

காசி மன்னரின் குறுக்கீடு பயனற்றுப் போயிற்று. செல்வம் கரைந்துகொண்டே வந்தது. இதனால் குடும்ப சொத்தைப் பாகப் பிரிவினை செய்ய முடிவு செய்தனர். அரிச்சந்திரரைத் தவிர குடும்பத்தினர் அனைவரும் ஒன்றாக இருந்து கலந்தாலோசித்து நீண்ட விவாதத்தின் பின்பு, ஒரு திட்டத்திற்கு வந்தனர். இத்தகைய விவாதங்களில் அரிச்சந்திரரால் பங்குபெற இயலாது. அவர் இயல்புக்கு அது ஒத்து வராது. அவர் இயல்பு அப்படி. பத்திரத்தில் என்ன எழுதி இருக்கிறது என்றுகூடப் படிக்காமல், அதனைத் தெரிந்துகொள்ள முயற்சிகூட செய்யாமல், 'குறிப்பிட்ட இடத்தில் கையெழுத்து போட்டார் அரிச்சந்திரர். இதுவரை செய்த செலவுக்காக ரொக்கமாக இருந்த பணத்தில் ஈடு செய்து விட்டு, நிலபுலன், வீடு முதலிய அசையாப் பொருள்களைப் பாகம் பிரித்துக்கொண்டனர். சில ஆண்டுகளுக்குப் பின்பு அரிச்சந்திரரின் அம்மாவின் அம்மாவும், பத்திரத்தை மாற்றி எழுதி அரிச்சந்திர ருக்கு எதுவும் கொடுக்காமல், அனைத்தையும் கோகுல் சந்திரரின் பெயருக்கே கொடுத்தாள்.

சொத்துப் பிரிவினை கூட்டுக் குடும்பத்தைச் சிதைக்காது. அக்கால வழக்கம் அது. பரம்பரை வீடு எல்லோருக்கும் பொது வானதாக இருந்தது. அனைவரும் ஒரே வீட்டில் கூட்டுக் குடும்ப மாகவே வாழ்ந்தனர். அரிச்சந்திரரின் சிறகுதான் சிறிது அறுபட்டது. கொஞ்சம் கொஞ்சமாகத் தன்னுடைய பாகத்தை யும் அழித்தார். கடன் பட்டார். கடன் பெருகிற்று. சொத்துக் கள் விற்கப்பட்டன. அரிச்சந்திரரின் தம்பி, அக்கடன்களைத் தீர்த்துச் சொத்துக்களைத் தன்வயமாக்கிக் கொண்டார். இவ்வாறு கொஞ்ச காலம் சென்றது. அரிச்சந்திரரின் சொத்து முழுவதும் போயிற்று. அரிச்சந்திரர் இதற்கு ஆயத்தமாகவே இருந்தார். கடனும் அதனால் ஏற்பட்ட தொல்லைகளும் மனவேதனைகளைக் கொடுத்தாலும், அவர் இந்தி இலக்கியப் பணியில் சிறிதும் தளர வில்லை. அவர் குடும்பத்தினர் புத்தகம், பத்திரிகை இவற்றிற்காக செய்யும் செலவு வீணானது என்றே கருதினர்; அரிச்சந்திரரை, அவரது இலக்கியப் பேரார்வத்தை அவர்களால் உணர்ந்து கொள்ள முடியவில்லை.

# 6

பாரதேந்து இந்தி மொழிக்கு ஆற்றிய ஆக்கப்பணிகளை நன்கு அறிந்துகொள்ள வேண்டுமென்றால், அவர் காலத்திற்கு முன்பு இருந்த இந்தி மொழியின் வளர்ச்சியைப் பற்றி அறிந்து கொள்வது இன்றியமையாததாகின்றது.

இன்று வழக்கில் இருக்கும் இந்தி, ராஜஸ்தான், ஹரியாணு, டெல்லி, உத்திரபிரதேசம், மத்தியபிரதேசம் , பீகார் போன்ற வடஇந்திய மாநிலப் பகுதிகளில் பேசப்பட்ட கிளை மொழிகளிலிருந்து உருவாகியது. ராஜஸ்தானில் கடீபோலி, பங்கரு போன்ற கிளை மொழிகளும், உத்திரபிரதேசம், மத்தியப்பிரதேசம், பீகார் இங்கெல்லாம் பிரஜ் பாஷா, கனௌஜி, புந்தேலி, அவதீ, பகேலி, சத்ரதிஸ்கட், மைதிலீ, போஜ்புரீ, மகதீ போன்ற கிளைமொழிகளும் பேசப்பட்டு வந்தன. ஆனால், பொதுவாக எல்லா கிளை மொழிகளும் எழுதுவதற்குத் தேவநாகரி எழுத்துக்களையே பயன்படுத்தி வந்தன.

பொதுவாகப் புலவர்கள், மார்வாரீ, பிரஜ்பாஷா, அவதீ, மைதிலீ, போஜ்புரீ ஆகிய கிளைமொழிகளில் கவிதைகள் இயற்றி வந்தமையால், இந்தியில் இக்கிளை மொழிகளிலேயே இலக்கிய நயமுடைய பாக்கள் மிகுதியாகக் காணப்பட்டன. அப்பொழுது உரைநடை இலக்கியம் குறிப்பிடத்தக்க அளவு எதுவும் இல்லை. இடைக்காலம் வரை இந்த நிலைதான் நிலவி வந்தது.

முகமதியர்கள் இந்தியாவிற்கு வந்த பின்பு, புதிய ஒரு உந்துதல் ஏற்பட்டது. முகமதியர்கள் வென்று ஆண்டு வந்த இந்திய பகுதிகளில், தக்காணம் உட்பட, அவர்கள் கொண்டு வந்த அரபி, பார்சி, துருக்கி முதலிய மொழிச் சொற்களை இந்தியின் பேச்சு மொழிகள் மிகுதியாகக் கடன் வாங்கிப் பயன்படுத்தின. இந்த இடங்களில்தான், இந்தச் சூழ்நிலையில்தான் உருது மொழி உருவாகியது. (துருக்கி மொழியில் உருது என்பதற்கு பாடிவீடுகள்—படைகள் தங்கும் இடம் என்பது பொருள்). இந்தியில், அம்மொழிக்குப் புறம்பான அரபி, பார்சி, துருக்கி ஆகிய இம் மொழிச்சொற்கள் புகுந்தமையால், புதிய ஒரு பேச்சு மொழி உருவாயிற்று. நாட்டில் பேசப்பட்ட மொழிக்கும் படை எடுத்தோர் கொண்டு வந்த மொழிக்கும் இடையே நெருங்கிய உறவு ஏற்பட்டது. அநேக இந்துக்கள் ஆட்சியாளர் மொழியாகிய பார்சி மொழியைப் பயின்று, அதனைப் பயன்படுத்தினர். அதைப்போல முகமதியர்களில் பல நிலைகளிலும் வாழ்ந்தவர்கள்—அரசன் முதல் மதக்குருக்கள் வரை—டெல்லி வட்டாரத்தில்

பேசப்பட்டு வந்த நாட்டு மொழியைப் பயன்படுத்தினர். அப்பொழுது அதன் பெயர் ரேக்தா அல்லது ஹிந்கவி என்பது. மிரன் பிஜாபுரி, புர்ஹாநுதீன் சையத் மொகமத் கைசுத்ராஜ் போன்றோர் ஹிந்தவியில் எழுதினர். அமீரகுஸ்ரு, மலிக் மொகமத்ஜாய்சி, கபீர் போன்றவர்களும் ஹிந்தவியில் எழுதினர். இவர்கள் எழுதிய ஹிந்தவி சுத்த, அழகான ஹிந்தவி என்று கருதப்படுகிறது. மொகலாய மன்னர்கள், குறிப்பாக அக்பர் போன்றோர், ஹிந்தவியைப் பயன்படுத்துவதையே ஆதரித்தனர். உண்மையில், அக்பரே, 'அக்பர் ராய்' என்ற புனைபெயரில் ஹிந்தவியில் சில கவிதைகள் எழுதி இருக்கின்றார். அவருடைய அன்பிற்குப் பாத்திரமான மந்திரிகள் டோடர் மல், பிர்பல், அப்துல் ரஹீம் கான்கானு, அப்துல் பைசி போன்றோரும், இவர்களோடு சமகாலத்தவர்களான கங்கவி துளசிதாஸ், சூர்தாஸ், கேசவதாஸ் போன்றோரும் ஹிந்தவியிலேயே எழுதி வந்தனர். ஜஹாங்கீர், ஷாஜஹான் இவர்கள் காலத்திலும் அம்மன்னர்கள் இந்தியை ஆதரித்தனர். பிற்காலத்தில் இலக்னோ, அயோத்தி, முர்ஷிதாபாத், ஹைதராபாத் இங்கெல்லாம் ஆண்ட அரசர்களும் இந்தியை ஆதரித்தனர். கடைசி மொகலாய மன்னனே ஒரு புலவன். அவன் நல்ல இந்தியிலேயே எழுதினுன்.

மொகலாயர் காலத்தில் கவிதை இலக்கியமே மிகுதியாக வழக்கில் இருந்தது. இருந்தாலும் சில உரைநடை இலக்கியங்களும் தோன்றின. ராம்பிரசாத் நிரஞ்சனி **பாஷா யோக வசிஸ்ட (1741)** என்ற நூலையும், பண்டித தௌலத் ராம் **பத்ம புராணம் (1761)** என்ற இந்தி மொழிபெயர்ப்பு நூலையும் எழுதினுர். கிருத்தவர்களுடைய வரவு, இம்மொழியின் வளர்ச்சியில் மற்றொரு திருப்பத்திற்குக் காரணமாயிற்று. இவர்கள் பைபிளை அந்த அந்த நாட்டு மொழிகளிலேயே போதித்து வந்தனர். அவர்களுக்கு அச்சு வசதியும் இருந்தது. இவைகளெல்லாம் இந்தி உட்பட பல இந்திய மொழிகளில் எழுதுவதற்கு ஊக்கத்தைக் கொடுத்தன. பெருவாரியான மக்களுக்குப் புரியும் மொழியில் எழுதுதல் வேண்டும் என்பது இவர்களது முயற்சி. அது பேசும் இந்தியாகவே இருந்தது. எனினும் பல காரணங்களால் இம்மொழி உரைநடையில் அவ்வளவாகப் பயன்படுத்தப்படவில்லை. சில உரைநடை நூல்களே பிரஜ் மொழியைப் பயன்படுத்தின.

மொகலாய அரசின் வீழ்ச்சியும், கிழக்கிந்திய கம்பெனியின் ஆட்சியும், ஆங்கிலேயருக்குப் பேச்சு மொழியின் இன்றியமையாமையை உணர்த்தின. கம்பெனியே 1780-இல் இதற்கெனக்

கல்லூரி ஒன்றை ஏற்படுத்தி, இங்கிலாந்திலிருந்து வரும் புதியவர் களுக்கு இந்திய் மொழிகளைக் கற்றுக் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்தது. டாக்டர் கில்கிரிஸ்ட் என்பவர் இக்கல்லூரியின் தலைவ ராகப் பணியாற்றினூர். உருது மொழியில் ஈடுபாடு கொண்ட இவர், உருது - ஆங்கிலம் அகராதி ஒன்றை வெளியிட்டார். உருது மொழி இலக்கணம் ஒன்றும் எழுதினூர். இவர் பல்வேறு இடங்களிலிருந்து சிறந்த எழுத்தாளர் பலரை ஒன்ருகத் திரட்டி ஞர். நிரந்தரமான அரசியல் சூழ்நிலையும், அரசாங்கம் கொடுத்த ஆதரவும் இவ்வெழுத்தாளர்களின் எழுத்துப்பணிக்கு உந்துதல் களாக இருந்தன. இவ்வாறு திரண்ட எழுத்தாளர்கள் பெரும் பாலும் இருமொழி வல்லுநர்களாகவே இருந்தனர். இவர்கள் இந்தி அல்லது இந்தவியோடு, பார்சி, உருது, ஆகிய மொழிகளி லும் - அவை அக்கால அரசியல் மொழிகள் - வல்லுநர்களாகவே இருந்தனர். வல்லூ 'லால்', ஆக்ராவில் இருந்து வந்திருந்தார். அதனுல் அவருக்கு மேற்குப் பகுதி உத்திரபிரதேசத்தில் பேசப் பட்ட கடீபோலியில் நல்ல பயிற்சி இருந்தது. அதோடு பிரஜ்பாஷா வும் தெரியும். இவர் பாகவத புராணத்தை இந்தியில் மொழி பெயர்த்து அதனை பிரேம் சாகர் என்ற பெயரில் வெளியிட்டார். பிரஜ் பாஷையில் எழுதப்பட்ட மற்ருெரு நூல், **ராஜ நீதி**. இது ஹிதோபதேசம், பஞ்சதந்திரம் இவற்றின் தழுவல். இந்தி-உருது கலந்த "சிம்மாசன் பச்சீஸி" "பைதால் பச்சீஸி" முதலிய நூல்களை யும் லல்லூஜீ'லால்' எழுதினூர். மற்ருெரு பெரிய எழுத்தாளர் சதல் மிஸ்ரா. இவர் **நசி கேகோ பாக்யான்** (1803) என்ற நூலை எழுதினூர். இவருடைய இந்தி, லல்லூஜி 'லால்' எழுதிய இந்தியை விட அதிகமாக இந்து இயல்புடையதாக இருந்தது. அதனுல் அரசாங்கத்தினர் இதனை அதிகமாக ஆதரிக்கவில்லை. இன்ஷா அல்லா கான், **ராணி கேத்கீ கீ கஹானி** என்ற சிறந்த இலக்கியம் ஒன்றைப் படைத்தார்.

மக்கள் பேசும் இந்தி மொழியைப் பெருவாரியான உரைநடை யில் பயன்படுத்தவில்லை என்ருலும், அது உரைநடைக்குரியது என்பதைப் பொதுவாக மக்கள் ஏற்றுக் கொண்டனர். ராஜா ராம் மோகன்ராய் தனது **பங்கதூத்** என்ற இதழை நான்கு மொழிகளில் வெளியிட்டார். அதில் ஒன்று தேவநாகரி எழுத்தில் வெளியிடப்பட்ட இந்தி மொழியில் உள்ளது. இவ்வெழுத்தினை அவர் தனது சில அறிக்கைகளிலும் பயன்படுத்தினூர். முதல் முதல் வெளியான இந்தி இதழ் **உகந்த மார்த்தாண்ட்** (1826) என்பதும் இந்தி உரைநடையைப் பயன்படுத்தியது.

துரதிருஷ்டவசமாக, இந்தி இலக்கியம், இந்தி இதழியல் இவற்றில் ஏற்பட்ட இந்த முன்னோடி முயற்சிகளை, அடுத்த பத்து

களில் பின்பற்றுமலே விட்டுவிட்டனர். இந்தப் பத்துகளில் இத் துறைகளில் மேற்கொண்டு முன்னேறுவதற்குரிய முயற்சிகள் எதுவும் உருவாகவில்லை. இதற்குக் கிழக்கிந்திய கம்பெனியின் பாராமுகமான போக்கும் ஒரு காரணமாகலாம். அவர்கள் மொகலாய அரசாங்க மொழியையே ஆதரித்தனர். மொகலாய அரசர்களை வீழ்த்துவதே அவர்களது முக்கிய நோக்கம். அதற்கு அம்மொழி உதவியது. அதனுல் இந்தியின் வளர்ச்சி பின்னே தள்ளப்பட்டது.

இந்தி பேசும் மொழிப் பிரதேசத்திலிருந்து முதல் இந்திஇதழ், 1844-இல் காசியிலிருந்து வெளிவந்தது. வங்காள எழுத்தாள ராகிய தாராமோகன் மித்ரா என்பவரால் பதிப்பிக்கப்பட்ட இவ் விதழ், ராஜா சிவபிரசாத் 'சித்காரே-இ-ஹிந்தி' ஆதரவில் நடை பெற்று வந்தது. இவ்விதழ் பார்சீ மொழி கலந்த உருது மொழி யில் வெளிவந்தது. இந்தியோடு இதற்குரிய தொடர்பு தேவநாகரி எழுத்தொன்றேயாகும். ராஜா சிவ பிரசாத், தேவ நாகரி எழுத்துக்களை ஆதரித்தாலும், அவர் பயன்படுத்திய மொழி நடை பார்சீ கலந்த உருது மொழியேயாகும். இந்தி எழுத்தாளர் கள் இதனை எதிர்த்தனர். இந்த எதிர்ப்பின் காரணமாக 1850-இல் **சுதாகர்** என்ற இதழ் காசியிலிருந்து வெளிவர ஆரம்பித்தது. இதனையும் தாரா மோகன் மித்ராவே தொடங்கினுர். இது தூய இந்தி மொழியைப் பின்பற்றியது.

ராஜா சிவ பிரசாத் கையாண்ட இந்தி மொழி நடைக்கு எதிர்ப்புகள், இதழ்கள் அளவில் நின்றுவிடவில்லை. **இதிகாச திமிர நாசக்** (வரலாற்று இருளைப் போக்குபவர்) போன்ற நூல்களில் அவர் கையாண்ட நடையையும் மக்கள் எதிர்த்தனர். இந்த எதிர்ப்பியக்கத்தின் தலைவர் ராஜா லச்மன் சிங் (1826-1896). இந்தி, உருது இரண்டும் அடிப்படையில் வேறுபட்டன என்றும், இரண்டும் இருவேறு மொழிகள் என்றும் இவர் கூறினுர். சாதாரண நடைமுறையில் இருக்கும் எளிய இந்தி சொற்களுக்குப் பதிலாக உருது சொற்களைப் பயன்படுத்துவதை இவர் குறிப்பாக எதிர்த்து வந்தார்.

## 7

இதழ்களிலும், நூல்களிலும் பயன்படுத்தப்பட வேண்டிய மொழியைப்பற்றிய பிரச்சினையை அரிச்சந்திரர் 1867-இல் தீர்த்து வைத்தார் என்றுதான் கூறவேண்டும். அந்த ஆண்டு **கவிவசன சுதா** என்ற மாத இதழ் ஒன்றை அவர் தொடங்கினுர். புதியனவும்

பழையனவும் ஆகிய கவிதைகளை வெளியிடுவதற்கென அவ்விதழ் தொடங்கப்பட்டது. தொடக்க காலப் பிரதிகளில் பிகாரி எழுதிய 'தோஹா' கவிதைகளும், ஜாயஸி எழுதிய 'பத்மாவத்' என்ற காவியமும் 'அனுராக பாக்' முதலிய கவிதைகளும் வெளியாயின. அரிச்சந்திரரே ஒரு பெரிய கவி. அதோடு கவிதைகளை உணர்ச்சியோடு எடுத்துக் கூறுவதிலும் வல்லவர். மக்கள் அவரைக் கலியுகக் கண்ணன் என்று அழைத்தனர். அவருடைய கரிய நிறமும், நீண்ட தலைமுடியும் இப்பெயருக்குக் காரணமாயின. அவருடைய கவித்துவ ஆற்றல், பாக்களை எடுத்துக்கூறும் பாங்கு இதழில் வெளிவந்த அவரது கருத்துக்கள்-இவைகளெல்லாம் இவ்விதழைப் படிப்பவர் தொகையைப் பெருக்கிற்று.

இதனுடைய அச்சுப் பிரதிகள் 250ஆக இருப்பினும் - சந்தாதாரருக்கு 150 பிரதிகள், ஆங்கிலேயே கல்வி இலாகாவிற்கு 100 பிரதிகள் - இவ்விதழ் மக்களிடையே மிகவும் பிரபலமாயிற்று. விரைவிலேயே அது மாதம் இருமுறையாகவும் பின்பு வார இதழாகவும் மாறியது. பிற்காலத்தில் **கவிவசன சுதா** உரைநடைக் கட்டுரைகளையும் வெளியிட்டது.

பிற்கால மதிப்பீட்டின்படி, 1867-இல் ஜம்மு, சிகந்தராபாத், காசி ஆகிய இடங்களிலிருந்து தனிப்பட்டார் வெளியிட்ட மூன்று இந்தி இதழ்களில் கவிவசன சுதாவும் ஒன்று. இதன் பதிப்பாசிரியர் அரிச்சந்திரர். இவரை இந்தி இதழியல் உலகின் ராம் மோகன் ராய் எனப் புகழ்ந்தனர். இவ்விதழைத் தொடங்கும் பொழுதே அவர் ஒரு சிறந்த எழுத்தாளர். அவரது முயற்சி, வேறு பல எழுத்தாளர்களுக்குத் தூண்டுதலாக அமைந்தது. அவருடைய முயற்சியால் இந்தி இதழியலுக்கு ஒரு நல்ல வலுவான அடிப்படை கிடைத்தது என்று கூறலாம். இதனைத் தொடர்ந்து நல்ல இலக்கியத் தரமுடைய பல இதழ்கள் இந்தியில் தோன்றின. ஆனால், பொதுமக்கள் ஆதரவின்மையால், பல, சில ஆண்டுகளே நடைபெற்றுப் பின் இறந்தன.

கவிவசன சுதாவின் வெற்றி, இதழியல் துறைகளில் மேலும் புதிய வேகத்தைக் காணவேண்டும் என்று அரிச்சந்திரரின் தாகத்தைத் தூண்டியது. சில ஆண்டுகளிலேயே (1873) அவர் **ஹரிச்சந்திர மெகஸீன்**' என்று வேறொரு இதழைத் தொடங்கினார். இதழியலில் அது மற்றொரு அத்தியாயத்தைத் தொடங்கியது. அரிச்சந்திரரின் நண்பர்கள் 'மெகஸீன்' என்ற ஆங்கிலச் சொல்லை விரும்பவில்லை. அதனால் அவர் **ஹரிச்சந்திர சந்திரிகா** என்று அதன் பெயரை மாற்றினார். எனினும் அதன் பழைய பெயராகிய 'மெகஸீன்' என்பதைப் பின்பக்க அட்டையில் பதிப்பித்திருந்தார்,

**ஹரிச்சந்திர சந்திரிகா** ஒரு புதுமாதிரியான இதழ். இது உரை நடை, நாடகம், கட்டுரைகள், புத்தக விமரிசனம், சதுரங்கம், நகைச்சுவை இவை போன்ற பொருள்களில் கட்டுரைகளை வெளியிட்டு, உரைநடையை ஆதரித்து வளர்த்தது. சாதாரண மக்களைப் பாதிக்கும் எந்தச் செய்தியைப்பற்றியும் இதில் கட்டுரைகள் வெளிவரும் இதில் கட்டுரை எழுதுபவர்கள் உதவி ஆசிரியர்கள் என அழைக்கப்பட்டனர். அக்காலப் பெரிய எழுத்தாளர்கள் எல்லாம்–ஈஸ்வர் சந்திர வித்யாசாகர், கேசவ் சந்தர் சென், சுவாமி தயானந்த சரஸ்வதி - இவர்களெல்லாம் இதில் எழுதினர். **கவிவசன சுதா**வைப் போல, இதனையும் ஆங்கில அரசு ஆதரித்து, அதில் நூறு பிரதிகளை வாங்கிற்று.

இதில் குறிப்பிடத்தக்கது, இவ்விதழ்கள் மக்கள் பேசிவந்த இந்தி மொழியிலேயே எழுதப்பட்டு வந்தது. இது ராஜ சிவ பிரசாத் 'சித்தாரே-இ-ஹிந்த்' அவர்கள் பின்பற்றிவந்த, பார்சி கலந்த இந்தி மொழியிலிருந்தும், காசிமாநகரத்து அந்தணர்கள் எழுதி வந்த, வடமொழி கலந்த இந்தி மொழியிலிருந்தும் முற்றிலும் மாறுபட்டது. [அரிச்சந்திரர் பொதுமக்களால் பேசப்பட்டுவந்த இந்தி மொழியை ஆதரித்தார். காசியில் ஒரு பெரிய செல்வச் சீமான் குடும்பத்தில் பிறந்தவராயினும், அவர் பழகியதெல்லாம் சாதாரண மக்களோடுதான். சமூகத்தின் அடித்தளத்தில் இருப்பவரோடு, தெருவழியாகப் பாடிக்கொண்டே செல்லும் லாவணிகளோடு, இளவரசரைப்போல ஆடை ஆபரணங்கள் அணிந்த அரிச்சந்திரர் உட்கார்ந்துகொண்டு பாடல்கள் இயற்றுவார். சாதாரண மக்கள் பேசிய இந்தி மொழியை, உயிருள்ள உண்மை இந்தியைத் தனது எழுத்துக்கு உரிய மொழியாகக் கொண்டார்.] எம்முறையில் பார்த்தாலும் **'ஹரிச்சந்திர சந்திரிகா'** மிகவும் பிரபலமான ஒரு இதழ் என்றே கூறவேண்டும். அதைப் படிப்பவர்கள் மறு இதழ் வரும் நாளை எதிர்பார்த்துக் கொண்டே இருப்பர். அதன் வளர்ச்சியும், வரவேற்பும் அரிச்சந்திரருக்கு மிகவும் மகிழ்ச்சியைக் கொடுத்தன.

இந்த இரண்டு இதழ்களும், இந்தி இதழியல் வளர்ச்சிக்கு ஒரு பெரிய உந்துதலாக இருந்தன. இவற்றைத் தொடர்ந்து பல இதழ்கள் வெளிவந்தன. இதழியல் ஆசிரியர்களும், எழுத்தாளர்களும் அடங்கிய ஒரு புதிய பரம்பரை முன்னேக்கி வளர்ந்து வந்தது. 'அரிச்சந்திரமண்டல்' (அரிச்சந்திரரைப் பின்பற்றுபவர் இயக்கம்) தோன்றி, அரிச்சந்திரர் தோற்றுவித்த மரபினைப் பின்பற்றி, அவர் எழுத்துக்களால் உந்தப்பட்டு எழுதிவந்தனர். இவர்களில் குறிப்பிடத்தக்கவர், பத்ரி நாராயண சௌத்ரி "பிரேம்கன்". இவர் மயிலாபூரில் இருந்து பதிப்பித்த 'பிரேம்கன்

என்ற இதழை உருது மொழியிலிருந்து இந்தி மொழிக்கு மாற்றினார். இவரைப்போல் இதழ்களின் மொழியை மாற்றியவர்கள் பலர். இவர் 'ஆனந்த் கதம்பினி' என்ற மாத இதழையும், 'நாகரி நீரத்' என்ற வார இதழையும் வெளியிட்டார். இவர், தனது இதழ்களில் வேகமாக எழுதிக் குவிப்பார். "இதழில் பல துறையைச் சார்ந்த பல்வேறு போக்குடைய பலர் எழுதவேண்டும். ஒருவரே எழுதிக் குவிப்பது இதழுக்குப் பொருந்தாது" என்று அவருக்கு அரிச்சந்திரர் ஒருபொழுது அறிவுரை கூறினார். உருது மொழியிலிருந்து, இந்தி மொழிக்கு மாறிய மற்றொரு எழுத்தாளர் பண்டித பிரதாப் நாராயண மிஸ்ரா. இவர் அரிச்சந்திரரின் இதழ்களில் எழுதத் தொடங்கினார். கான்பூரிலிருந்து வந்த '**பிராமணி**' என்ற இதழை இவர் பதிப்பித்தார். கல்கத்தாவிலிருந்து அலகாபாத்திற்குத் திரும்பிய பண்டித பாலகிருஷ்ண பட்டா 'ஹிந்தி பிரதீப்' என்ற இதழைத் தொடங்கினார். பின்பு இவ்விதழே அலகாபாத்திலுள்ள **ஹிந்தி வர்தினி சபாவின்** கொள்கை விளக்க இதழாக விளங்கிற்று. அந்த சபாவும், இதழும் அரிச்சந்திரரால் ஆதரிக்கப்பட்டு ஊக்கப்பட்டன. அரிச்சந்திரரே அவ்விதழின் குறிக்கோள்களை எழுதினார். அவர் அதற்குத் தலைமையுரை (கவிதையில்) ஆற்றுவதற்காக அலகாபாத் சென்றார். அவ்வுரையில் நாட்டின் முன்னேற்றத்தில் தாய்மொழியின் முக்கியத்துவத்தை விளக்கினார். உருது மொழியிலிருந்து இந்திக்கு மாறிய புகழ்பெற்ற எழுத்தாளராகிய லாலா சீனிவாசதாஸ், மதுராவிலிருந்து டெல்லிக்குப் புறப்பட்டுச் சென்று '**சதாதர்ஷ்**' என்ற இதழைத் தொடங்கினார். பிற்காலத்தில் அரிச்சந்திரரிடம் மிகுந்த மதிப்புடையவரும், பெரிய எழுத்தாளருமாகிய பண்டித இராதாசரன் கோஸ்சுவாமி பாரத**தேந்து** என்ற பெயரிலேயே இதழ் ஒன்றைத் தொடங்கினார். மற்றொரு இதழ் **சரசுதாநிதி**, பாரதேந்துவினிடத்தில் மிகவும் மதிப்புடைய இராம்ஷங்கர் வியாஸ் என்பவரால் தொடங்கப்பட்டது.

இந்த எல்லா இதழ்களும், ஆசிரியர்களும் **கவிவசன சுதா** அல்லது **ஹரிச்சந்திர சந்திரிகா** ஆகிய இரண்டு இதழ்களில் ஒன்றற்குக் கடமைப்பட்டவர்களே. தனது வெற்றியைக் கண்டு அரிச்சந்திரர் மகிழ்ந்தது இயற்கைதானே. தன்னாலும், தன் நண்பர்களாலும் மிகுந்த உணர்ச்சியுடனும் வேகத்துடனும் எழுதப்பட்ட கட்டுரைகள் எல்லாம் **சந்திரிகா**வில்தான் வெளிவந்தன என்று பிற்காலத்தில் அரிச்சந்திரர் சொல்வாராம்.

இதழியலில் கண்ட இந்த வெற்றி அவரை மேலும் இரண்டு இதழ்களைத் தொடங்கத் தூண்டியது. அவை **பால போதினி**

**பாகவத் தோஷினி** என்பன. இவற்றில் பாலபோதினி பெண்களுக்கான மாத இதழ். இது பெண்களின் கல்வி, பெண்களின் விடுதலை இவைகளை மிகவும் ஆதரித்தது. இத்துறையில் இது ஒரு முன்னோடி இதழ். ஆங்கில அரசும் இதனை ஆதரிக்க முன்வந்தது. **கவிவசன சுதா, ஹரிச்சந்திர சந்திரிகா** இவைகளைப் போலவே, இந்த இதழிலும் குறிப்பிட்ட தொகை பிரதிகளை ஆங்கில அரசு வாங்கியது. நான்காவதாகத் தொடங்கிய **பாகவத்தோஷினி** வைணவ மதத்தினரின் தேவைக்காகத், தான் பின்பற்றிய மதக்கோட்பாட்டுக்காகத் தொடங்கப்பட்டது. இதில் சில இதழ்களே வெளி வந்தன.

## 8

அரிச்சந்திரர் ஒரு சிறந்த வைணவ பக்தர். வைணவத்தைப் பரப்புவதற்கெனக் கழகம் ஒன்றைத் தொடங்கினார். வடஇந்தியாவில் பிற இடங்களில் வாழும் வைணவர்களோடு தொடர்பு கொண்டார். வல்லபாசாரிய மார்க்கத்தின் தலைவராகிய, மதுராவில் வாழ்ந்து வந்த ராதாசந்திர கோஸ்சுவாமியோடு அணுக்கமான நேரடித் தொடர்பு வைத்துக் கொண்டார். அம்மார்க்கத்தில் வாழ்ந்த, அதிகமாகப் பிறருக்குத் தெரியாத பெரியவர்களைப்பற்றி, அவர்களுடைய நூல்களைப்பற்றி, ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதுபவர்களைப்போலச் செய்திகளைத் திரட்ட, கோஸ்வாமிக்குக் கடிதங்கள் எழுதிச் செய்திகளைத் திரட்டினார். அவ்வியக்கத்தின் பெரியோர்களின் படங்களைச் சேகரித்துத் தருமாறு அவருக்குக் கடிதங்கள் எழுதினார். கிடைக்கும் படங்களுக்குத் தகுந்த தொகை கொடுப்பதாகவும் எழுதினார்.

பசுவதை செய்வதைத் தடுக்கவேண்டும் என்று கூறினார். இது சம்மந்தமான நாடகங்கள், நூல்கள், எழுதுபவருக்குச் சிறந்த தொகை, பணம் கொடுக்க முன்வந்தார். புலால் உண்ணுதல், மது அருந்துதல் இவைகளையும் தடை செய்யவேண்டும் என்று பிரச்சாரம் செய்தார். இவை கடியப்பட்டன. இவைகளைத் தவிர்த்து வாழும் இயக்க உறுப்பினர்கள், எழுத்தில் சபதம் எடுத்துக்கொள்ள வேண்டும். இவ்வியக்கம் எவ்வளவு நாள் நடைமுறையில் இருந்தது என்பதைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை. ஆனால் இக்கொள்கைகளில் பாரதேந்து மிகவும் அழுத்தமான நம்பிக்கையோடு செயற்பட்டார்.

அவருடைய இதழ்களைப் படிப்பவர்களையும், நண்பர்களையும் வெளிநாட்டுத் துணிகளை வாங்குவதில்லை என்று சபதம் எடுத்துக்

கொள்ளத் தூண்டினூர். இப்பொழுது உத்திரபிரதேசம் எனப்படு கின்ற பகுதியில், இந்தி அரசாங்க மொழியாக ஏற்றுக்கொள்ளப் படுதல் வேண்டும் என்ற இயக்கத்தில் மிகவும் ஈடுபட்டார். அரிச்சந்திரர் ஏழு வயதிலேயே கவிகள் எழுதத் தலைப்பட்டார். அனேக சமூகப் பிரச்சினைகள், அரசியல் பிரச்சினைகள் இவைகளைப் பற்றி எழுதினூர். எனினும் பெரும்பாலும் கவிதைகள் வைணவ பக்தி இயக்கத்தின் அடிப்படையிலேயே எழுதப்பட்டன. பக்தி இய்க்கத்தின் கடைசி கவியாக இவர் கருதப்பட்டார்.

அரிச்சந்திரர் பிரஜ் பாஷாவை மிகவும் விரும்பினூர். அம் மொழியிலேயே கிருஷ்ணன், ராதா இவர்களைப்பற்றியும், அவர்க ளோடு தொடர்புடைய கருப்பொருள்களைப்பற்றியும் பெரும்பான் மையான பக்தி இலக்கியங்கள் எழுதப்பட்டிருந்தன. இனிமையும் மென்மையும் உடைய பிரஜ்பாஷா—சிலர் அதற்கு எலும்பே கிடையாது என்பர்—அரிச்சந்திரரின் முயற்சியால் புதுமையும் மெருகும் பெற்றது. உண்மையான பக்திமார்க்கம்—புலனுணர்வு போகம், இரண்டையும் இணைத்து இவற்றிடையே ஒரு ஒருமைப்பாட்டைக் கொண்டுவந்தார். அவருடைய அநேக பாக்களில் புலனுணர்வு போகக் கருத்துக்கள், ஆன்மீகக் கோட்பாட்டோடு இணைந்து காணப்படும். சிருங்காரம் (மோகம்—புலனுணர்வு) பக்தியில் (கடவுளுக்கு அடிமை எனும் ஆன்மீக உணர்வு நிலையில்) முடியும்.

அரிச்சந்திரர் பக்தி, காதல் இவைகளை அடிப்படையாகக் கொண்டு சுமார் மூவாயிரம் பக்திப் பாடல்கள் இயற்றி இருக்கின் றூர். சுமார் நூறு யாப்பு அமைதிகளில் கவிதைகள் இயற்றி இருக்கின்றூர். ஹிந்தோளா, பூர்வி, கயல், கல்யாணா, விஹாக் முதலிய பல யாப்பு முறைகளை அவர் கையாண்டிருக்கிறூர். அவர் எழுதிய சுமார் இருபது நூல்களில், அவர் பின்பற்றிய மதக் கோட்பாட்டுப் பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாக்கள் அவர் பின்பற்றிய வைணவ மார்க்கத்தோடு நேரடியாகத் தொடர் புடையன.

அவர் தனது "பக்த சர்வஸ்வ" நூலில் தாம் வழிபடும் பெருமாளின் பல்வேறு தோற்றங்களை வருணிக்கின்றூர். 'பிரேம மாலி'காவில் கண்ணனின் பிள்ளைப் பருவத்தை விளக்குகிறூர். இதில் கண்ணன் தான் பிறந்த இடத்தை விட்டகலும்பொழுது, கோபியர் (இடைக்குலப் பெண்கள்) கொண்ட ஏக்கம் ஒரு சிறந்த கருப்பொருளாகப் படைக்கப்பட்டிருக்கிறது. கண்ணன் பிரியும் பொழுது கோபியர் அனுபவித்த பிரிவுத் துன்பத்தை விளக்கு

வதோடு இக்காவியம் தொடங்குகிறது. சில கவிகள், பிரியும் கோபிகள் மனஅமைதியுடன் வாழ்வதற்குக் கண்ணன் கூறும் அறிவுரைகளாக அமைகின்றன. கண்ணனின் லீலைகளும், பக்தர் களின் செயலற்ற நிலையும் சில பாக்களின் கருப்பொருள்களா கின்றன. பக்தர்கள் செயலற்ற நிலைமைகளை விளக்கத் தனித்தனி இராகங்களைப் பயன்படுத்துகின்றார். எந்த விதமான சுயநலமும், நோக்கமும் இன்றிப் பெருமாளை விரும்புவதும், அவ்விருப்பத்திற் காகவே பக்தி செய்வதும் அவருடைய பாக்களில் அடுத்தடுத்து வரும் கருப்பொருள். அவருடைய "பிரேம் சரோவர்" தெய்வீகக் காதலின் தாகத்தை விளக்குகிறது. பத்துப் பன்னிரண்டு பாக்கள் காதல் பாதையின் கடினமான போக்கை விளக்குகின்றன. வேறு ஏழு பாக்கள் குளங்களின் அழகை விளக்குகின்றன. மற்றும் ஏழு பாடல்கள் தெய்வீகக் காதலின் பெருமையைக் கூறுகின்றன. கடைசி நான்கு பாடல்கள் உண்மைக் காதலின் இயல்புகளைக் கூறுகின்றன. "பிரேம மாதுரி"யில் கவி, அவனின்றி உயிர் இயங்க முடியாது என்று திருமாலோடு தன்னை ஐக்கியப்படுத்திக் கொள்கிறார். பெருமானிடம் பெண்கள் கொள்ளும் காதல் எப்படிப் பித்தாக மாறுகின்றது என்பதை விளக்குகிறார். "பிரேம பில்வாரி"யில் காதல் நம்மைத் தூய்மைப்படுத்தும் மூலக்கூறு என்று விளக்குகின்றார். "பிரேம பிரதாபம்" காதலில் ஏற்படும் தோல்வியின் ஏமாற்றத்தை விளக்குகிறது. "பிரேம அஸ்ரு வர்ஷன்" மழைக் காலத்தில் தோன்றும் காதலைப் பற்றியது. இந்நூலின் நாற்பத்தாறு பதங்களும் அம் மாரிக்காலத்து மகிழ்ச்சி யையும், ஊஞ்சலாட்டத்தின் இன்பத்தையும், குளிர்ந்த பூங்காவில் ஓடி மறைந்து விளையாடுவதையும், இன்பக்காதல் உரையாடல்களை யும் விளக்குகின்றன. பருவக்கால மழையின் பின்பு தோன்றும் இன்பக் காட்சிகளின் நுகர்வே இந்நூலின் அடிப்படைக் கரு "பிரேம தரங்கா"வில் காதலை இவ்வுலகியலுக்குக் கொண்டுவந்து, மனித தத்துவத்தைக் காட்டுகின்றார். காதல் ஏமாற்றத்தின் தனித்த இயல்புகளை அங்கே காணலாம். இதில் வைணவக் கவி, மனிதக் காதல் கவியாக மாறுகிறார். ஆழமான காதலில்லா வாழ்வு நிறமற்றது, உள்ளீடற்றது, பொருளற்றது என்பது "பிரேம சரோவர்" முழுவதும் ஊடுருவிச் செல்லும் கருப்பொருள். எந்த முறையில் கணக்கிட்டாலும், பிரஜ்பாஷாவுக்கு அரிச்சந்திரர் பணி மிகமிக ஆழமானது, சிறப்பானது. பிரஜ்பாஷாவை வேக மான உணர்ச்சிமிக்க மொழியாக்கிய பரம்பரையில் குறிப்பிடத் தக்க கடைசி மனிதர் அவர்.

# 9

அவர் பிரஜ் பாஷாவில் எழுதும் ஆற்றல் மிக்கவராக இருந்தாலும், எதிர்காலத் தேவையை உணர்ந்தவராகவும் காணப்பட்டார், கடீபோலியில் எழுதிய தொடக்க கால எழுத்தாளரும் அவரே. பிற்காலத்தில் பிரஜ் பாஷாவையும் அழித்துக்கொண்டு, கடீபோலியே தலை தூக்கியது. கல்கத்தாவிலிருந்து வெளிவந்த 'பாரத மித்ரா'வில், கடீபோலியில் எழுதப்பட்ட இவர் பாக்கள் வெளிவந்தன. கடீபோலி பாக்களை வெளியிடும்பொழுதே, கடீபோலியில் பாக்கள் எழுதுவதை எவ்வகையில் தூண்டலாம் என்று வாசகர்களைக் கேட்டார். பிற்காலத்தில் வழக்கில் மிகுதியாகக் கையாளுவதற்குரிய யாப்பு வகைகளை விரிவாக விளக்கினார்.

அரிச்சந்திரர் இந்தி இலக்கியத்தில் பல்வேறு துறைகளில் ஆற்றிய பணிகள் மக்களுக்கு நன்கு தெரிந்திருந்தாலும், உருது மொழியிலும் அவர் ஒரு சிறந்த எழுத்தாளர் என்பதைப் பலர் அறியமாட்டார்கள். 1872-இல் இவர், 'காஸித்' என்ற பெயரில் உருது வார இதழ் ஒன்றைக் கொண்டுவரத் திட்டமிட்டு, அதன் வெளியீட்டைப்பற்றிய அறிக்கையையும் வெளியிட்டார். ஆனால் வாசகர்களிடமிருந்து போதுமான ஆதரவு கிடைக்காமையால் அவர் அத் திட்டத்தைக் கைவிட்டார். அவர் உருது மொழியில் எழுதிய கவிகள், உரைநடைகள், அங்கதம் எல்லாம் நூறு பக்கங்களுக்கும் குறையாமல் இருக்கும்.

அனீஸ், நாஸித் போன்ற உருது புலவர்களை ஆதரித்து வந்தார். 'ரஸா' என்ற புனைபெயரில் உருது மொழியில் கவிகள் இயற்றினார். அவர் எழுதிய கஜல்கள் சிறந்தனவாகக் கருதப்படுகின்றன. கவி 'அமீர் ஆலி', அவர் தர்பாருக்குத் தவறாமல் வந்து செல்பவர். **குலிஸ்தானே - புர்பஹார் சமர்னிஸ்தானே புர்பஹர்** என்ற தலைப்பின் கீழ், இரண்டு, உருதுப்பாக்களின் தொகை நூல்களை அவர் வெளியிட்டார். இத் தொகை நூல்கள் பலராலும் பாராட்டப்பட்டன.

முன்னுக்கு வரும் இளம் உருது கவிஞர்களோடு, ஆண் பெண் ஆகிய இருபாலரோடும், நெருங்கிய தொடர்பு வைத்துக்கொண்டிருந்தார். போபால் பேகம் எழுதிய கவிகளில் மிகவும் ஆர்வம் காட்டினார். அவ்வம்மையார் 'ரூப் ரதன்' என்ற புனைபெயரில் கவிதைகள் எழுதி வந்தார். இவ்வம்மையாருடைய கஜல்களைத் தம் தொகை நூல்களில் சேர்த்ததோடு, கல்கத்தாவில் இருந்து வெளிவந்த பாரத மித்ராவில் அவ்வம்மையாருடைய கவிதைகளை

வெளியிடுமாறு, அக் கவிதைகளைப் பாராட்டிக் கடிதங்கள் எழுதி ஞர்.

அரிச்சந்திரர் உரைநடையிலும் உருது மொழியில் எழுதினர். அவருடைய 'பஞ்சாவன் பைகம்பர்' 'குஷி' போன்றவை உருது மொழியில் சிறந்த உரைநடைக்கு எடுத்துக் காட்டுகள். 'கானூன் தாஜிராதே - வெளஹர்' அல்லது நல்ல கணவனுக்குரிய நடை முறை விதிகள் - என்ற அங்கதம், உயர்ந்த, பார்சிமொழி கலந்த உருது மொழியில் எழுதப்பட்டு, பார்சீ கவியில் முடிகிறது. இதைப் பற்றி இலக்னேவில் இருந்து வந்த 'ஹிந்துஸ்தானி அக்பார்'' என்ற இதழ், "ஆற்றல்மிக்க இவ்வாசிரியர் மிக அழுத்தமான முறையில், கணவனைச் சந்தேகிக்கும் மனைவியரை நன்கு படம் பிடித்துக் காட்டுகிறார். மிகவும் களிப்பூட்டும் படைப்பு இது. பாபு சாகிப் (அரிச்சந்திரர்) அவர்களை, இதற்குத் துணையாக மனைவியர் களுக்குரிய நடைமுறை விதிகளைப்பற்றியும் எழுத வேண்டுகிறோம். பாபு அரிச்சந்திரர் இந்தியில் எவ்வளவோ எழுதி இருக்கிறார். இந்தியின் வளர்ச்சியை அவருடைய படைப்புகள் கணக்கிடு கின்றன என்று கூறுவதில் மிகை ஒன்றும் இல்லை. அவருடைய இந்தி நூல்களை எல்லாம் உருது மொழியில் மொழிபெயர்த்துக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இதனை அவர் செய்தால், உருது படிக்கும் மக்கள் அவருக்கு மிகவும் கடமைப் பட்டவர்கள் ஆவார்கள். அன்றியும், இவர்களைப் போன்ற எழுத்தாளர்கள் உருது மொழியில் நாடகம் எழுத சிறிது நேரம் ஒதுக்கி எழுதினால், அம் மொழியில் சிறந்த நாடகம் இல்லாக் குறையை அது போக்கும்; அம்மொழியை அது வளப்படுத்தும். 'நீல்தேவி', 'சத்ய ஹரிச்சந்திரா' போன்ற நாடகங்களைப் பார்க்கும்பொழுது, உருது மொழியில் இத்தகைய நாடகங்கள் இல்லாத ஏழ்மை நிலையைக் கண்டு துக்கம் அடைகின்றோம்" என்று எழுதியது.

# 10

இந்தி மொழியில் பல்வேறு இலக்கியத் துறையில் படைத்துப் பெரும்புகழ் பெற்றாலும், அரிச்சந்திரரை எப்பொழுதும் நினைவில் வைத்துக்கொள்ளத் தூண்டும் துறை நாடகமேயாகும். பதினெட்டு ஆண்டு இலக்கிய பணியில் அவர் சுமார் பதினெட்டு நாடகங்களும் எழுதி இருக்கின்றார். அவற்றில் பல அவர் சொந்தப் படைப்புக் கள்; மற்றவை வங்காளம், வடமொழி, ஆங்கிலம் இவற்றிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டவை.

அரிச்சந்திரரிடம் இயல்பாகவே நாடக அறிவாற்றல் மிகுதி யாக இருந்தது. அவர் நாடகம் எழுதும் நாடக ஆசிரியர் மட்டு மன்று; சிறந்த நடிகரும் ஆவார். இவ்விரு இயல்புகளும் அவருடைய இளமைப் பருவம் முதலே வெளிப்பட்டன. திருமணம் முடிந்தவுடன் ஸ்ரீ ஜகந்நாத்துக்குத் தலயாத்திரை சென்ற பொழுது, புருத்வான் என்னும் இடத்தில் வங்காள நாடகம் ஒன்றை வாங்கினுர். அவருடைய குடும்பம் வங்காளிகளோடு கொண்ட வாழ்க்கைத் தொடர்பாலும், அவர் வங்காள மொழியை அறிந்திருந்தார். அதனுல், அந்த நாடகத்தை அவரால் எளிதில் படிக்க முடிந்தது. வங்காள மொழியின் புதிய நாடகப்போக்கு அவரை மிகவும் கவர்ந்தது; பாதித்தது. அதைப் போல இந்தி மொழியிலும் நாடகங்கள் எழுத வேண்டும் என்று எண்ணினுர்.

அவருடைய நடிப்பாற்றலுக்கு ஒரு எடுத்துக்காட்டு; சீதல் பிரசாத் திருபாடி எழுதிய ஜானகி மங்கல் என்ற முதல் இந்தி நாடகத்தை மேடை ஏற்றுவதற்குக் காசி மன்னர் வேண்டிய உதவிகளைச் செய்தார். இராமாயண நிகழ்ச்சிகளை அடிப்படை யாகக் கொண்டு, 1867-இல் எழுதப்பட்ட இந்த நாடகம், அரசர் முன்னிலையிலேயே நடிக்கப்பட்டது. ஆனுல் அன்று இலக்குவனுக நடிக்கவேண்டிய நடிகனுக்கு உடல் நலமில்லை. அரசரோ வந்து விட்டார். வேறு வழி இன்மையால் நாடகத்தை ஒத்தி வைக்க வேண்டியதுதான் என்று மன்னர் கருதினுர். இந்தச் சிக்கலைப் பற்றி ஆலோசித்துக் கொண்டிருக்கும்பொழுது, 17 வயது நிரம்பிய அரிச்சந்திரர் அங்கு வந்தார். சிக்கலைக் கேள்விப் பட்டதும், உரிய வசன வரிகளைக் கற்றுக்கொள்ள சிறிது அவகாசம் கொடுத் தால் தன்னுல் அந்தப் பாத்திரத்தை ஏற்று நடிக்க இயலும் என்று கூறினுர். இந்த இளையவனுல் இக்குறுகிய காலத்தில் இலக்குவன் பேசவேண்டிய வசன வரிகளை மனப்பாடம் பண்ணிப் பேசுவது இயலாது என்று அரசர் கூறினுர். அரைமணி நேரம் கொடுத்தால் தன்னுல் செய்ய முடியும் என்று அரிச்சந்திரர் தெரிவித்தார். மன்னனுக்கு நம்பிக்கை இல்லை. அரிச்சந்திரருக்கு ஒரு மணி நேரம் கொடுத்து நாடகத்தை விரைவில் படிக்கச் சொன்னுர். அனைவரும் வியக்கும்வண்ணம் அரிச்சந்திரர் நாடகத்தில் ஒவ்வொரு சொல்லையும் அப்படியே மனப்பாடம் பண்ணி ஒப்புவித்தார். அப்பாத்திரம் அவருக்குக் கொடுக்கப்பட்டது. நடித்தார்; நாடகம் நடைபெற்றது; பாராட்டையும் பெற்றது.

இங்கிலாந்தில் வெளியான அக்கால இதழ் ஒன்றில் வெளி வந்த இச் செய்தி சிறிது மிகையாகக்கூட இருக்கலாம். எனினும், அரிச்சந்திரரின் நினைவாற்றல் மிகப்பெரிது என்பதையும்,

நாடகம் எழுதுவதிலும், நடிப்பதிலும் மிகச்சிறந்த ஆற்றல் படைத்தவர் என்பதையும் வேறு பல சான்றுகளாலும் அறிகிறோம்.

இந்தச் சமயத்தில்தான் அரிச்சந்திரர் நாடகம் எழுத ஆரம்பித்தார். முதன் முதலில் எழுதிய நாடகம் **பிரவாஸ் நாடகம்**; அது இப்பொழுது கிடைக்கவில்லை. அவரது இரண்டாவது நாடகமாகிய ரத்னுவளி, ஒரு மொழி பெயர்ப்பு. அதன் முகவுரையில் (அதுதான் இப்பொழுது கிடைக்கிறது) அரிச்சந்திரர் கூறுவது.

"பல்வேறுபட்ட துறைகளில் நூல்கள், அதிலும் குறிப்பாக மன மகிழ்ச்சிக்காகவும், உணர்ச்சிவயப் பட்ட வேகமான மொழிக்காகவும் படிக்க வேண்டிய நாடகங்கள் இந்தி மொழியில் மிகவும் குறைவு. அதனுல் சில நாடகங்களை இந்தியில் மொழி பெயர்த்துவிட வேண்டும் என்று ஆர்வமாய் இருக்கிறேன். சாகுந்தலத்திற்கு அடுத்தபடியாக, ரத்னுவளி ஒரு சிறந்த நூல். அதனுலேயே அதை மொழி பெயர்த்திருக்கின்றேன்... இதைத் தொடர்ந்து மற்ற மொழிபெயர்ப்புகள் வெளி வரும்."

அரிச்சந்திரரின் அடுத்த நாடகம் வித்யாசுந்தர். அது ஜதிந்திர மோஹன் தக்கூர், வங்காள மொழியில் எழுதிய நாடகத்தை அடிப்படையாகக் கொண்டது.

இவ்வாறு இவர் நாடகம் எழுதிக்கொண்டிருக்கும்பொழுது. 1870-இல் இந்தியாவிலேயே பெஸ்டோன்ஜி ஃபிரைம்ஜி ஒரிஜினல் தியேட்டர் கம்பெனி என்ற நாடகக் கம்பெனி தொடங்கப்பட்டது. ஏழாண்டுகள் கழிந்து, டெல்லி குர்ஷித்ஜி பாலிவாலா, விக்டோரியா தியேட்டர் கம்பெனியைத் தொடங்கினுர். இது இங்கிலாந்தில் கூட நாடகம் நடத்தியது. கவாஸ்ஜிகடாவு, "ஆல்ஃப்ரட், தியேட்டரிக்கல் கம்பெனியைத் தொடங்கினுர். பாரதேந்து, நாடகம் காட்சியினுல் மகிழ்ச்சி கொடுப்பதோடு, மனிதனுடைய ஐம்புலன்களுக்கும் இன்பம் கொடுத்து, ஐவகைக் கலைகளையும் இணைக்கிறது என்று கருதினர். அதனுலேயே அதனைத் தனது எழுத்துப்பணியின் சாதனமாகக் கொண்டார். பழைய நாடகங்கள், அக்கால ஆசிரியர்கள் விதித்த விதிகளுக்கு உட்பட்டு எழுதப்பட்டமையால், மாறிவரும் இக்காலப் போக்கிற்கு அவை பொருந்திவரா எனக் கண்டார். பார்சி நாடகக்குழுவின் வெற்றியைக் கண்டு, அதில் உள்ள சில நல்ல கூறுகளைப் பழைய நாடகங்களில் காணப்படும் நல்ல நாடக இயல்புகளோடு இணைத்து எழுத முற்பட்டார். இந்தி நாடகக் கம்பெனி, பார்சி

நாடக முறைகளைப் பின்பற்றி அக்காலத் தேவைக்கேற்ப, நீதிகளைக் கூறுவதற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்காமல், பாத்திரப்படைப்பிற்குச் சிறப்பிடம் கொடுத்தது.

பாரதேந்து நாடகங்களில் வரும் கவிதைகள் பொதுவாக இனிய பிரஜ்பாஷா அல்லது அவதீமொழியில் எழுதப்பட்டாலும், முதல் முதல், நாடகங்களில்தான் கடீபோலி அல்லது தற்கால இந்தியின் பொதுப் பேச்சு மொழியைப் பயன்படுத்தினர். அவருடைய அந்தணப் பாத்திரங்கள் எல்லாம் மக்கள் பேசும் இந்தி மொழியைப் பயன்படுத்தினர்.

அன்றியும் அவர் இடைப்பட்ட ஒரு போக்கையே பின்பற்றினர். காலத்திற்கொவ்வாத கோட்பாடுகளையும் முறைகளையும் ஒதுக்கித் தள்ளிவிட்டு, அக் காலத்திற்கொத்த புதிய உத்திகளையே தன் நாடகங்களில் பின்பற்றினர்.

பாரதேந்துவினுடைய முக்கியமான, கடைசி நூல், நாடகவியலைப் பற்றியது—நாடகம்—இதனை அவர் நோய்வாய்ப்பட்டுப் படுக்கையில் இருக்கும்பொழுது எழுதினர். நாடகம், இலக்கியத்தின் ஒரு முக்கியமான பகுதி என்று பாரதேந்து கருதியதற்கு இந் நூல் ஒரு எடுத்துக்காட்டு, "ஐரோப்பிய நாடகங்களின் பாணியும் வங்காள மொழியில் இன்று எழுதப்படுகின்ற நாடகங்களுமே நமது புதுமுறை நாடகங்களுக்கு முன்னோடிகள்" என்று அரிச்சந்திரர் அந்நூலில் குறிப்பிட்டார்.

பாரதேந்து புராணம், வரலாறு, சமூகம் இவைகளிலிருந்து நாடகக் கருப்பொருள்களை எடுத்துக்கொண்டார். அதில் வியப்பில்லை. ஆனல், அவர்காலச் சமூகச் சிக்கல்களைக் கருப்பொருளாகக் கொண்டது, இந்தி நாடகத்தில் புதுமை. விதவையர் மறுமணம், மாமிசம் உண்பதைத் தவிர்த்தல், சுதேச மன்னர்களின் குறுநிலங்களில் சீர்கேடான அரசியல், ஆங்கிலேயே மக்களின் பொருளாதாரப் பெருக்கத்திற்காக ஆங்கில அரசு இந்தியாவைச் சுரண்டல்—இவைகளெல்லாம் அவருடைய நாடகங்களின் கருப்பொருள்களாக அமைந்தன. இந்திய சமூகத்தின் சீர்கேடான நிலைகளைத் தைரியமாக அம்பலப்படுத்துவதில் அவர் சிறிதும் பின்வாங்கவில்லை. அரிச்சந்திரரின் சமகாலத்தவர்களாகிய அவருடைய நெருங்கிய நண்பர்கள் பிரதாப் நாராயண மிஸ்ரா, பத்ரி நாராயண செளத்ரி, பிரம்குன், பாலகிருஷ்ண பட்டா முதலியோரும் சமகாலச் செய்திகளையே கருப்பொருள்களாகக் கொண்டனர்.

அரிச்சந்திரர், இந்தி நாடகங்களுக்கு ஒரு புதிய வடிவைக் கொடுத்தார். சேக்ஸ்பியரின் 'மர்சண்ட் ஆஃப் வெனிஸ்' என்பதை இந்தியில் "துர்லாப் பந்து" என்று மொழிபெயர்த்து, அதில் வருகின்ற பாத்திரங்களுக்கு இந்திய பெயர்களைக் கொடுத்தார். போர்ஷிய, புரஸ்ரீ ஆனுள்; ஷைலக், ஷைலக்சு ஆனுன்; பாசனியோ, வசந்த் ஆனுன். வங்காளத்தில் இருந்து தழுவி எழுதிய **வித்யாசுந்தர்** என்ற நாடகத்தோடு, **பாரத் ஜனனி** என்று வேருென்றையும் இந்தியில் மொழிபெயர்த்தார். வடமொழியிலிருந்தும், பிராகிருத மொழியிலிருந்தும் மொழிபெயர்த்த அல்லது தழுவிய நாடகங்கள் மிகப்பல. **சத்திய ஹரிச்சந்திரா, சந்திராவலி, முத்ர ராட்சஸம், ரத்ஞவளி, கனஞ்ஜய விஜயா, கர்ப்பூரி மஞ்சரி, பாகண்ட விடம்பன்** என்பன அவை. அவருடைய புகழ்பெற்ற **சத்ய ஹரிச்சந்திரா** இலட்சிய குறிக்கோளாகிய உண்மைக்கும், அதனை அழிக்க எழும் முயற்சிக்கும் இடையே நிகழும் போராட்டம். அந்த நாடகத்தின் தலைவன் இதிகாச அரசன். எவ்வளவு துன்பம் அனுபவித்தாலும் உண்மையையே கடைப்பிடித்து நடந்தவன். அதற்காகத் தன் உடைமைகளை எல்லாம் இழந்து பெருந்துன்பத்துக்கு ஆளானுன். ஹரிச்சந்திரனும், விஸ்வாமித்திரரும் சாதாரண மனித ஆசைகளினுல் உந்தப்பட்டவர்கள் அல்லர். அவர்கள் உண்மையாகிய இலட்சியத்திற்கும், அதனை அழிக்க முயலும் முயற்சிக்கும் கொடுக்கப்பட்டிருக்கும் உருவகங்கள். இதிகாசக் கதையை அரிச்சந்திரர் நாடகமாக்கிய போக்கு மிகவும் உணர்ச்சியுடையதாகவும், நாடக இயல்புகள் நிறைந்தும் காணப்பட்டது.

**சந்திராவளி**—இது மற்ருெரு இதிகாச நாடகம்—கிருஷ்ண பரமாத்மாவின் ஆன்மீக காதலின் உருவகம். அக்காதலே இவ்வுலகைக் காக்கிறது. சந்திராவளி, அழியா இலட்சியத்தை அடைய நினைக்கும் மனிதனின் உருவகம். மானிட இன்ப துன்பங்களிலிருந்து மிக விலகி நிற்கும் ஒன்றன் மீது கொள்ளும் பக்தியின் உருவகம்.

**பிரேம் ஜோகினி :** வேருெரு விதமான இசை நாடகம், இதில் அக்காலக் காசி வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டுகிருர். காசி கணிகையர் பலரைக் கூறுகிருர். ஒருவேளை இவர்களெல்லாம் அவருடைய தர்பாருக்கு வந்து செல்பவர்களாக இருக்கலாம். அவர்களுடைய வாழ்க்கையை உண்மை பிறழாமல் எழுதுவதற்கு இத்தொடர்பு அவசியம் என அவர் செயலை நாம் ஞாயப்படுத்தலாம். **பிரேம் ஜோகினியின்** முதல் இரண்டு காட்சிகளையும் இருபுகைப் படங்கள்—**நல்லது கெட்டது அல்லது இரண்டுங்கெட்டது** என்ற தலைப்பில் தொடர்ச்சியாக எழுதி வந்தார். **பாரத துர்கஷா** என்ற நாடகத்தில் அக்கால இந்தியாவின் சீர்கெட்ட நிலையைப் படம்

பிடித்துக் காட்டுகிறார். நாட்டில் சீர்கெட்ட நிலையை உருவகங்களின் மூலம் விளக்குகிறார். நோய், ஒழுக்கக்கேடு, மதுவேட்கை, அறிவின்மை, வறுமை, இவைகளே இதில் வருகின்ற முக்கியமான பாத்திரங்கள். 37 பக்கங்கள் கொண்ட இந்த நாடகத்தில், நாடகம் பார்ப்பவர் தம்மைத் திருத்திக் கொள்ளும் எண்ணங்களைத் தூண்டும் வகையில் உணர்ச்சிமயமான கவிதை மொழி நடையைப் பயன்படுத்தி உள்ளார்.

**அந்தேர் நாகரி** என்ற வேறொரு நாடகத்தில் திரும்பவும் பழைய கருவுக்கே வருகின்றார். நம் நாட்டின் சீர்கெட்ட நிலையைக் குறித்து ஆங்காங்கே அலசுகின்ற போக்கில் இந்நாடகம் அமைந்திருக்கிறது. இது அவருடைய முதல் வரலாற்று நாடகம். இதில் இந்திய பெண்களைத் தட்டி எழுப்புகின்றார். இதன் முகவுரையில், அவர்தம் கருத்துக்களை வெளிப்படையாகக் கூறுகிறார். "ஆண்களோடு தடையின்றி மகிழ்ச்சியோடு பழகும் ஆங்கிலநாட்டுப் பெண்களோடு நமது நாட்டுப் பெண்களை ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது, எல்லா நாட்களையும்விட இன்று, கிருத்தவர்களுக்கு மிகமுக்கியமான இந்த கிருஸ்துமஸ் நாளில், நான் மிகவும் துக்கமடைகிறேன். இதனால் நமது பெண்கள், அவர்களுடைய அடக்கத்தையும், பெண்மையின் பெருமிதத்தையும் துறந்து விட்டுத் தங்கள் நடை முறைகளை மாற்றிக்கொள்ளவேண்டும் என்று நான் கூறவில்லை. ஆனால் தங்கள் குடும்பத்தை வெற்றிகரமாக நடத்துவதிலும், பிள்ளைகளுக்கு நல்ல கல்வியைக் கொடுப்பதிலும், இந்திய சமூகத்திற்கு, இந்திய நாட்டிற்கு நல்லவை எவை என்பதைத் தேர்ந்தெடுப்பதிலும் எச்சரிக்கையுடனும் தெளிவுடனும் இவர்கள் செயலாற்ற வேண்டும் என்று விரும்புகிறேன். இந்திய பெண்கள் குடும்பச் சிக்கல்களில் இருந்து விடுபட்டு, ஆக்கப் பூர்வமான செயல்களில் ஈடுபடவேண்டும். இதற்குரிய முக்கியமான முதற்படி, முன்னேற்றத்திற்குத் தடையாக இருக்கும் கட்டுப்பாடான மரபுகளில் இருந்து இவர்கள் விடுபடவேண்டும். பழங்காலத்தில், ஆரியர்கள் இந்தியாவுக்கு வருவதற்கு முன்பு, இங்கு, பெண்கள் இந்தக் கேவலமான நிலையில் இல்லை. அவர்கள் தெளிவான அறிவுடையவர்களாக இருந்தனர். இடைக்காலத்தில் அவர்களுக்கேற்பட்ட இழிநிலையைத் திறந்துகாட்டவே இந்நாடகத்தை எழுதி இருக்கின்றேன். இந்நாடகத்தை அவர்கள் கையில் ஒப்படைக்கின்றேன். நான் அவர்களை வேண்டிக்கொள்வது ஒன்றே ஒன்றுதான். அவர்கள் இதனைப் பின்பற்ற வேண்டும்; இந்தப் புகழ் மிக்க வீரப்பெண்களின் செயல்களைப்பற்றி அவர்கள் சிந்திக்க வேண்டும். அவர்களை முன்மாதிரியாகக் கொண்டு அவர்களைப்போல, உறுதிப்பாட்டோடு நம் பெண்கள் மேலே செல்ல வேண்டும்."

**விஷஸ்ய விஷ மௌஷதம்** என்ற நாடகம் சுதேசி மன்னர் களின் ஆட்சி நிலவும் குறுநிலங்களில் சீர்கேடான ஆட்சியை விளக்குகிறது. பரோடா மன்னனை நிராகரித்த நிகழ்ச்சிகளே இதற்குப் பின்னணி. இது ஒரு அங்கத நாடகம்.

**வைதிகீ ஹிம்ஸா, ஹிம்ஸா நபவதி** என்ற நாடகத்தில் மாமிசம் உண்கின்றவர்களை, அதனை ஆதரிப்பவர்களைச் சாடுகின்றார். அவர் ஒரு வைணவ பக்தர் என்ற முறையில், பிராணிவதையைக் கண்டிக்கிறார். மது அருந்துதல், இந்துக்கள் இஸ்லாமிய பெண்களை வைப்பாட்டியாக வைத்துக்கொள்ளுதல் இவைகளைக் கடிகிறார்.

சிறிது ஆங்கிலம் தெரிந்தவுடன், பெரிய சீர்திருத்தவாதி களாகத் தங்களைக் கருதிக்கொண்டு செயலாற்றுபவர்களை இவர் பரிகாசம் செய்கிறார். ஆய்வாளர்கள், அவர் ராஜா சிவ பிரசாத் 'சிதாரே—ஹிந்த்' என்பவரை மனதில் வைத்துக்கொண்டுதான் இவ்வாறு எழுதியிருக்கிறார் என்று கூறுகின்றார்.

## 11

என்றும் கடமை தவறாத குடும்பத்தில் பிறந்த அரிச்சந்திரர், சம்பிரதாயப் பற்றுடையவராகவே இருந்தார். அப்பொழுது விக்டோரிய மகாராணி இந்தியாவின் அரசி. ஒவ்வொரு இந்தியனும் அவளுக்கும், அந்த அரசகுடும்பத்திற்கும் கடமை தவறாதவனாக இருக்க வேண்டும் என்று கருதினார். பதினேரு வயதில், இளவரசன் ஆல்பர்ட்டைப்பற்றிப் பாடல் ஒன்றை எழுதினார். அவர் தொடங்கிய பள்ளிக்கூடத்தில் அரசியின் ஒவ்வொரு பிறந்த நாளையும் தவறாது கொண்டாடுவார். அன்று அலங்கார விளக்குகள் முதலியன ஏற்பாடு செய்யப்பட்டு மிகவும் சிறப்பாக அவ்விழா கொண்டாடப்படும். 1869-இல் வேல்ஸ் இளவரசர் இந்தியாவிற்கு வந்தபொழுது, காசியைச் சுற்றிக் காட்டுவதற்கு அரிச்சந்திரரையே அமர்த்தி இருந்தனர். அப் பொறுப்பினை மிகச் சிறப்பாகச் செய்து முடித்தார். அதோடு, காசியிலுள்ள சிறந்த அந்தணர்களையும், பண்டிதர்களையும் இளவரசரைப்பற்றிப் பாக்கள் இயற்றுமாறு வேண்டிக் கொண்டார். இக்கவிகளை எல்லாம் தொகுத்து அச்சிட்டு வேல்ஸ் இளவரசருக்குப் பரிசாகக் கொடுத்தார்.

அரிச்சந்திரர் ஆங்கிலேயர்களின் நம்பிக்கைக்கு உரியவர். அதனால் அவரை முனிசிபல் கமிஷனராகவும், கௌரவ மாஜிஸ் ரேட்டாகவும் நியமித்தனர். மிகவும் இளம் வயதிலேயே அவருக்கு

இந்த நீதிபதி பதவி கிடைத்தது. அப்பொழுதிருந்த கௌரவ மாஜிஸ்ரேட்களில், இவர்தான் வயதில் இளையவர். வேறுபல சலுகைகளும் அவருக்குக் கிடைத்தன. அவருடைய இதழ்களில் நூற்றுக்கணக்கான பிரதிகளை அரசாங்கம் வாங்கிக்கொண்டதும் அவரைக் கௌரவப்படுத்துவதற்காகவே.

மற்ற எழுத்தாளர்களைப் போலன்றி அரிச்சந்திரர் இலண்டனிலுள்ள செயின் ஜேம்ஸ் அரண்மனையோடு நேரடித் தொடர்பு வைத்துக்கொண்டார். 1871-இல் நடந்த பேரரசுப் பொருட்காட்சிக்கு, இவர் அரிய பொருள்களையும் பழம் பொருள்களையும் அனுப்பி வைத்தார். அதற்கு வேல்ஸ் இளவரசர் கையொப்பமிட்டு சான்றிதழ் ஒன்றை அனுப்பி நன்றி கூறி இருந்தார். இலண்டனில் இருந்த ஆங்கில அரசி, இளவரசர், இவர்களைத்தவிர, ரஷ்யநாட்டுத் தலைவர் ஜார் மன்னன், ஜெர்மன் நாட்டுத் தலைவர் கெய்ஸர் இவர்களோடும் கடிதத்தொடர்பு வைத்துக்கொண்டார். அவர்களுக்குத் தனது இந்தி நூல்களைப் பரிசாக அனுப்பினார். கீழைக்கலை வல்லுநர்களாகிய கர்கன் ஸ்டாசி போன்றவர்களுக்கு மட்டுமின்றி, மேற்கத்திய நாட்டுத் தலைவர்களுக்கும் தன் நூல்களை அனுப்பி வைத்தார். இந்தி மொழியை இந்தியாவிற்கு வெளியே முதன்முதல் தன் நூல்களை அனுப்பிப் பரப்பியவர் இவரே. செயிண்ட் பீடர்ஸ்பர்க் என்னும் இடத்திலிருந்த ஒரு ரஷ்ய செனேட்டர் எழுதிய கடிதம், சென்ற நூற்றாண்டின் எழுபதுகளில், ரஷ்ய கீழைநாட்டுக்கலை வல்லுநர்கள், கீழைநாட்டுக் கலைகளைப் பற்றி விசாரித்து அறிவதற்குத் தகுதியுடையவராக அரிச்சந்திரரைக் கருதியதைக் கூறுகிறது. பெர்லின், செயின்ட் பீடர்ஸ்பர்க் இங்கெல்லாம் இவர் அனுப்பிய நூல்கள் கிடைத்தமைக்குரிய கடிதங்கள், இலண்டனிலுள்ள ஆங்கிலேய வெளிநாட்டு அலுவலகம் மூலம், கல்கத்தாவில் உள்ள கவர்னர் ஜனரலுக்கு அனுப்பப்பட்டு, அவர் உத்திரபிரதேசம் கவர்னருக்கு எழுதி, அவர் மூலம் அரிச்சந்திரருக்குக் கிடைத்தன.

தன்னை அரசபரம்பரையோடு தொடர்பு படுத்திக்கொள்வதற்கு எந்தவித சந்தர்பத்தையும் அரிச்சந்திரர் நழுவ விடுவதில்லை. இளவரசர் இந்தியாவிற்கு வரும் செய்தி அறிந்ததும், அவர் இந்தியாவில் இறங்கியதும், அவரைப் புகழ்ந்து அரிச்சந்திரர் கவிகள் இயற்றினார். அரசி கொலையாளிகளின் குண்டுகளிலிருந்து உயிர் தப்பியபொழுதும், ஆங்கிலப்படை (இந்தியப்படை) ஆப்கானிஸ்தான், பர்மா, இஜிப்த்து இங்கெல்லாம் வெற்றி பெற்றபொழுதும் மகிழ்ந்து ஆரவாரத்தோடு எழுதினார். ஆங்கில அரசகுடும்பத்தினர் காசிக்கு வரும்பொழுது, அவர்களோடு தொடர்பு கொண்டார். இவைகளெல்லாம் அவருக்குப் போட்டி

யாக வாழ்ந்த ராஜா சிவ பிரசாத் 'சித்தாரே—ஹிந்த்' அவரைச் சேர்ந்தவர்கள்—இவர்கள் உள்ளத்தில் பொறுமையைத் தூண்டின. அவர்கள் பாரதேந்துவை அவமானப்படுத்துவதிலும், அவருடைய செயல்களை, எழுத்துக்களைத் தப்பாக மேலிடங்களுக்குத் தெரியப் படுத்துவதிலும் எந்தச் சந்தர்ப்பத்தையும் நழுவவிடுவதில்லை. வெளிநாட்டவர் காசிக்கு வரும்பொழுது அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி அரிச்சந்திரர், அவர்களுக்கு இந்திய மக்களின் துன்பங்களையும், அடிமை வாழ்வையும் எடுத்துக்காட்டுவது அவருடைய எதிரிகளுக்கு ஒரு நல்ல வாய்ப்பாகப் பயன்பட்டது. இதோடு, வாழ்க்கையை அனுபவிப்பதில் ஆர்வம் கொண்ட அரிச்சந்திரருடைய நடைமுறைகளும் அவர்களுக்குத் துணையாக அமைந்தன. அவர் தனது மூதாதையர் வீட்டின் மேன் மாடியி லுள்ள வெளிக்கட்டிலின்மேல் நின்றுகொண்டு, கீழே குறுகிய பாதை வழியே போவார் வருவோரைப்பற்றிச் சாடைமாடை யாகப் பேசுவார். பெரும்பாலும் இப்பேச்சு நகைச்சுவையுடைய தாக இருக்கும். சில, அவர்களைச் சுடும் அளவு அவர்களைப்பற்றிய தாகவும், அவர்கள் தொடர்புகொண்ட நிறுவனங்களைப்பற்றிய தாகவும் இருக்கும். இதனால் சிலர் அவருக்கு வேண்டாதவர்கள் ஆயினர். அவருடைய செல்வத்தாலும், சமூகத்தில் அக்குடும்பத் திற்கிருந்த மதிப்பாலும் அப்பொழுது அவரை யாரும் ஒன்றும் செய்வதற்கில்லை. இதற்குமேல் தன் எதிரிகளைத் தனது இதழ்களில் சுடச்சுடத் தாக்குவார். இவைகளில் பல தூங்கிக்கிடக்கும் மக்களைத் தட்டி எழுப்பவேண்டும் என்ற நோக்கத்துடனேயே எழுதப்பட்டன. இந்திய மக்கள் வெளிநாடு சென்று தொழில் நுட்பங்களை அறிந்து வந்து இந்தியாவைத் தொழில் மயமாக்க முயலவேண்டும் என்று எழுதுவார். இந்தியாவின் செல்வம் தொடர்ந்து கரைந்துகொண்டே செல்வதைப்பற்றி எழுதுவார். 1870-லேயே வெளிநாட்டுப் பொருள்களை நிராகரிக்க வேண்டும் என்று இவர் பிரசாரம் செய்தது வியப்பிற்குரியதே. சுதேசி இயக்கம் வருவதற்கு இருபது ஆண்டுகளுக்கு முன்பே, அரிச்சந்திரர் வெளிநாட்டுப் பொருள்களைப் பயன்படுத்துவதில்லை என்று சபதம் எடுத்துக்கொள்ள மக்களைத் தூண்டினார். **அரிச்சந்திர சந்திரிகாவில்** விஞ்ஞானக் கோட்பாடுகள், தொழில் மயமாவதற்கு யந்திரங் களின் அடிப்படை தேவை, முன்னேற்றப்பாதையில் இந்தியா பின் தங்கி இருக்கும் நிலை, இந்திய மக்கள் தம் போக்கினை மாற்றிக் கொண்டு, இந்தியாவின் முன்னேற்றத்திற்கு உழைக்கவேண்டிய நிலை இவை போன்ற பல்வேறு செய்திகளைப்பற்றிய கட்டுரைகள் வெளிவந்தன. நூறு ஆண்டுகளுக்கு முன்பு அவர் எழுதிய இந்த அடிப்படைக் கருத்துக்கள் இன்றும் இந்தியாவிற்குத் தேவை யாகவே இருக்கின்றன.

ஆங்கிலேயர் இந்தியாவிற்கு வந்து, எப்படி இந்தியாவின் செல்வங்களைக் கொள்ளையடித்துக்கொண்டு செல்கின்றனர் என்பதை அலசிக் கட்டுரைகள் பல எழுதினார். இந்திய மக்கள் அனைவரும் ஒன்றுபட்டு இந்தியப் பொதுமக்களின் துன்பங்களைத் துடைக்க முன்வரவேண்டும் என்று எழுதினார்.

இவைகளை எல்லாம் ஆங்கில அரசின் அடித்தளத்தில் வேலை செய்பவர்கள் ஒத்துக்கொள்ளத் தயாராக இல்லை. அவர்கள் அரிச்சந்திரருக்கு எதிரிகளாயினர். அவருடைய இதழ்களுக்குக் கொடுத்து வந்த சலுகைகளை நிறுத்திவிட்டனர். அரிச்சந்திரர் தனது வாசகர்களை நம்பி இதழ்களை நடத்தி வந்தார். அங்கிருந்த அதிகாரிகளோடு தன் வெறுப்பைக் காட்டுகின்ற முறையில், அரிச்சந்திரர் முனிசிபல் கமிஷனர் பதவியையும், கௌரவ மாஜிஸ்ரேட் பதவியையும் விட்டெறிந்தார். அப்பொழுது அவருக்கு வயது இருபத்தைந்தேதான்.

ஆனால், ஆங்கிலேய அரச குடும்பத்திற்குக் கடமை தவறாத தனது இயல்பைத் தனிப்பட்ட ஒன்றாகச் செயற்படுத்தி வந்தார். அவ்வரசுக்குத் தான் நம்பிக்கைத் துரோகம் செய்தவன் என்று பிறர் கூறிய செய்தி, அவரை மிகவும் புண்படுத்தியது. கடைசி வரையிலும் அது உண்மையன்று என்பதை நிலைநாட்ட இவர் எந்த முறையினையும் பின்பற்றத் தயங்கவில்லை. அதற்குரிய ஆதாரங்களைத் தேடுவதிலும் அவர் பின்னடையவில்லை. 1970-இல் இவ்வாறு நம்பிக்கைக்குரியவராயிருத்தல், தேசியத்தின் ஒரு கூறாகவே கருதப்பட்டு வந்தது.

அரிச்சந்திரரும் அவருடைய நண்பர்களும் ஒரு பக்கமும், ராஜா சிவ பிரசாத் 'சித்தாரே—ஹிந்த்'வும் (ஆங்கில அரசுக்கு மிகவும் வேண்டியவர் என்று கருதப்பட்டவர்) அவரைப் பின்பற்றுகின்றவர்களும் மற்றொரு பக்கமுமாக, எத்தகைய இந்தியைப் பரப்புதல் வேண்டும் என்பதில் இவ்விருசாராரிடையே கருத்து வேறுபாடுகள் வலுப்பெறுவதாயின. ஆங்கிலேயர்களுக்குப் பல துறைகளில் உழைத்து வந்த ராஜா இப்பொழுது கல்வித்துறையில் முக்கியமான பதவியில் இருந்தார். இவர் இந்தியில் ஆரம்ப வகுப்புகளுக்குரிய பாடப்புத்தகங்களை எழுதினார். அவை தேவநாகரி எழுத்துக்களில் எழுதப்பட்ட உருது மொழியேயாகும். அவருடைய இந்தியைப் பற்றிய வாதம் வலுப்பெற்றது. **கவிவசன சுதா, ஹரிச்சந்திர சந்திரிகா** இவற்றில் இந்த நடையைக் கிண்டல் செய்து பொதுவாக அரிச்சந்திரர் எழுதியதை, ராஜாவைத் தாக்கியதாக, ராஜாவும் அவரைச் சார்ந்தாரும் கருதினர். அதனால் இத்தகைய கட்டுரைகளில் வரும் செய்திகளைத் தப்பாகத்

திரித்து ஆங்கில அரசுக்கு எடுத்துக்கூறினர். கவர்னர் ஜனரலும், உத்திரபிரதேச கவர்னரும் பரிகாசம் செய்யப்பட்டனர் எனவும் அவர்களுக்குக் கூறினர். இந்தியர்களெல்லாம் அடங்கி நடக்க வேண்டும் என்று எதிர்பார்க்கும் ஆங்கில அதிகாரிகள், இதனால் தாங்கள் தாக்கப்படுவதாகக் கருதி, ராஜா சிவ பிரசாத், 'சித்தாரே—ஹிந்த்' - அவரோடு சேர்ந்துகொண்டனர். இதனால் **கவிவசன சுதா** இதழுக்கு அரசாங்கம் கொடுத்து வந்த சலுகையை நிறுத்திவிட்டனர். இவ்விதழ், இயல்பாகவே ஒழுங்காக வருவதில்லை. வியாபார ரீதியில் தோல்வியே கண்டது. இப்பொழுது இது நட்டத்தில் ஓடும் இதழாகவே மாறிற்று. இதனால் ஏற்பட்ட பொருள் இழப்பு மிகுதி. இதனால் இதன் உரிமையைத் தன் நண்பர் ஒருவருக்கு மாற்றிக்கொடுத்தார். **பாலபோதினி** இதழுக்குக் கொடுத்த சலுகையையும் நிறுத்தியபொழுது, அதனை மூட வேண்டியது வந்தது. அரிச்சந்திரர் மிகவும் வருந்தினர். அவர் அவ்விதழ்களை நிறுத்தித் தன் தோல்வியை ஒத்துக்கொள்ளத் தயாராக இல்லை. **கவிவசன சுதாவை** நடத்தி வந்த புது ஆசிரியரிடம் பாலபோதினியையும் அதோடு இணைத்துவிடும்படிக் கேட்டுக்கொண்டார். இது பெயரளவிலேயே இணைக்கப்பட்டது. பாலபோதினியின் மறைவை என்ன செய்தும் தடுக்க முடியவில்லை. ராஜா சிவ பிரசாத் தூண்டுதலினால், **கவிவசன சுதா,** அதன் இறுதிக்காலத்தில், அதனைத் தொடங்கிய ஆசிரியருக்கே எதிராகக் கிளம்பியது.

எஞ்சி இருந்தது ஹரிச்சந்திர சந்திரிகா என்றே ஒரே இதழ் தான். அது சிறிது காலம் நடைபெற்று வந்தது. **மோஹன் சந்திரிகா** என்ற இதழைத் தொடங்கிய அரிச்சந்திரரின் நண்பர் ஒருவர், ஹரிச்சந்திர சந்திரிகாவை அதனுடன் இணைத்துவிடும் படி அரிச்சந்திரரைக் கேட்டுக்கொண்டார். இப்புதிய இதழ் **ஹரிச்சந்திரா அவுர் மோஹன் சந்திரிகா** என்ற பெயருடன் வெளி வந்தது. அங்கு மோஹன்லால் விஷ்ணுலால் பாண்டயா அதன் பொறுப்பினை ஏற்றார். இதன் பிறகு, இது நாததுவாராவிற்குச் சென்று, இராஜஸ்தான் பாலைவனத்தில் இறந்து போயிற்று.

அரிச்சந்திரர் இறப்பதற்கு முன்பு தனக்கு மிகவும் விருப்பமான சந்திரிகாவைத் திரும்பவும் **நவோதிகா சந்திரிகா** என்ற பெயரால் புதுப்பித்து நடத்தினர். அரிச்சந்திரர் இறப்பதற்கு முன்பு சில பிரதிகளே வெளிவந்தன. இதற்கிடையில் எம். வி. பாண்டயா, அரிச்சந்திரரின் சந்ததியினர் இப்படி இப்பத்திரிகையை எடுத்து நடத்துவதற்கு மறுப்பு தெரிவித்தார்,

# 12

அரிச்சந்திரர் பலருடைய போக்கில் தலையிட்டு அவர்களுடைய வெறுப்பைச் சம்பாதித்துக்கொண்டார். அதிலும் குறிப்பாக, தேசீயத்திற்கோ அல்லது இந்தியின் வளர்ச்சிக்கோ ஊறு விளைப்பனவாக இருந்தாலும் ஆங்கிலேயர்கள் பிறப்பிக்கும் கட்டளைகளைக் கண்மூடித்தனமாகச் செயற்படுத்தும் அதிகாரிகளின் வெறுப்பைப் பெரிதும் சம்பாதித்துக் கொண்டார். ஆனாலும் அவருடைய பெரும் பகைவன்கூட, அவர் இந்தி மொழி இலக்கியத்தின் வளர்ச்சிக்குக் காட்டிய புதிய திசைகளை மறுக்கமுடியாது. இந்தி இதழியல் வளர்ச்சியில் அவர் ஒரு முன்னோடி. கவிவசன சுதா, ஹரிச்சந்திர சந்திரிகா இரண்டும், அதில் எழுதிவந்த எழுத்தாளர்களை அதைப்போன்ற பல இதழ்களைத் தொடங்குமாறு தூண்டின. அரிச்சந்திரரும் அவர்களை ஊக்கித் திருத்தி நடத்திச் சென்றார்.

அந்த இரு இதழ்களும் இந்தி இலக்கியத்தில் நகைச் சுவைப் போக்கை வளர்க்கத் துணை செய்தன. அக்காலத்தில் இதழ்களில் எளிமையான போக்கில் எழுதுவதே மரபாக இருந்தது. பாரதேந்துவின் நகைச்சுவை எழுத்துக்களைத் தவிர, கான்பூரைச் சார்ந்த பிரதாப் நாராயண மிஸ்ரா, அவர் பேசிய வட்டார மொழியிலிருந்து—உள்ளாவ் ஜில்லா இந்தியில் உள்ள விசித்திரமான சொற்களையும், சொற்றொடர்களையும் பயன்படுத்தி நகைச் சுவையை இந்தி இலக்கியத்தில் புகுத்தினார். பாலகிருஷ்ண பட் என்பவரும் எளிய முறையில், ஆனால் பெருமிதப்போக்கில் எழுதி வாசகர்களைக் கவர்ந்தார்.

இதழியலைப் போலவே, இந்தியில் நாடகம் எழுதுவதிலும் அவர் முன்னோடியாகத் திகழ்ந்தார். அவருடைய இதழ்களோடு தொடர்புடையவர்களும், அவர் இலக்கிய வாழ்வோடு தொடர்புடையவர்களும், அவரைப் பின்பற்றி நாடகங்கள் பல எழுதினர். எடுத்துக்காட்டாக பிரதாப் நாராயண மிஸ்ரா அனேக நாடகங்களை எழுதினார்—பாரததுர்தசா, கலி கௌதுக் ரூபக், ஹட்டீ ஹமீர் போல்வன அந்நாடகங்கள், பண்டித பாலகிருஷ்ண பட்டா பால விவாகம், கலிராஜ்-கீ-சபா, ரயில கா விகட் கேல் போன்ற நாடகங்களை எழுதினார். பண்டித பத்ரி நாராயண சௌத்ரி, 'பிரம்கன்' பாரத சௌபாக்யம், பிரயக் ராமகமன், வராங்கன ரகஸ்ய நாடகம் போன்றவற்றையும் லாலா ஸ்ரீனிவாஸ் தாஸ் பிரகலாதா சரித்திரம், சம்யோசிதா (சம்யுக்தை), தப்கரி ஸமவரன் முதலிய நாடகங்களையும் எழுதினார். பாரதேந்துவின் உறவினர், பாபு

ராதாகிருஷ்ணதாஸ் இலக்கியத்தில் ஈடுபாடு கொண்டு, பாரதேந்து முடிக்காது விட்டுச் சென்ற நூல்களை முடித்து எழுதிய தோடு, துக்கினி பாலா, மஹறாணு பிரதாப் என்ற நாடகங்களையும் எழுதினர்.

நாடகம் எழுதத் தூண்டியதோடு, பாரதேந்துவோடு தொடர்புகொண்ட எழுத்தாளர்கள் இலக்கிய ஆய்வுக்கட்டுரை களையும், குறிப்பிட்ட நூல்களின் மதிப்பீடுகளையும், இலக்கியக் கோட்பாடுகளை விளக்கும் கட்டுரைகளையும், இலக்கிய இரசனைக் கட்டுரைகளையும் எழுதி வந்தார்.

நாம் முன்பு கூறியது போல, பாரதேந்து பல்வேறு யாப்பு களில் கவிகள் எழுதினர். பக்தி இயக்கத்தின் பல்வேறு போக்கு களைப்பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டார். அக்காலத்தில் வங்காள இலக்கியத்தில் தோன்றியதைப்போல, இந்தி இலக்கியத்திலும் ஒரு மறுமலர்ச்சி தோன்றுவதற்கு அவரே முக்கிய காரணமாய் இருந்தார். புதியது எதுவும் அவர் கண்களைவிட்டுத் தப்ப இயலாது. உண்மையில், அவர் தன் பார்வையை எதிர் காலத் திலும், இந்தியாவின் வெளியேயும் செலுத்தினர். பிராங்கோ—ஜர்மன் போர் தொடங்கியபொழுது, அரிச்சந்திரர் அதைப்பற்றிய நூல்களின் கையெழுத்துப் பிரதிகளை வரவேற்ருர். அதற்கு நல்ல பணம் கொடுப்பதாகவும் விளம்பரப்படுத்தினர்.

சமுதாய சீர்திருத்தங்களில் மிகவும் ஆர்வமுடைய அவர், கடல் கடந்து பயணம் செய்வது, விதவையர் திருமணம், பெண் களின் கல்வி இவைகளை எல்லாம் ஆதரித்தார். பம்பாய், சென்னை, கல்கத்தா முதலிய பல்கலைக் கழகங்களில் தேறிய பெண் களுக்குப் புடவைகளைப் பரிசாகக் கொடுத்தார். பலதார மணம், பாலர் திருமணம் இவைகளை எல்லாம் கடுமையாக எதிர்த்தார்.

ஜகந்நாத் பூரிக்குப் போகும் வழியில், புருத்வானுக்குச் சென்றதுவே அவருடைய முதல் ரயில் பயணம். அவர் பிராயம் வந்ததும், பல பயணங்களை மேற்கொண்டார். இந்தியாவின் கிழக்குப்பகுதி, மேற்குப்பகுதி, வடக்குப்பகுதி இங்கெல்லாம் சென்ருர். அவருடைய பார்வையும், எண்ணங்களும் இதனுல் விரிவடைந்தன. குஜராத்தில், கந்தேஷ் என்னும் இடத்தில் பெருவெள்ளத்தில் அகப்பட்டு வாழ்விழந்த மக்களுக்கு உதவி செய்யுமாறு தனது இதழ்களின் மூலம் வேண்டுகோள் விடுத்தார். காசியில், தானே பல இடங்களுக்குச் சென்று, வெள்ளத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவி வேண்டினர். இவைகளெல்லாம் அவருடைய அகில இந்தியப் பார்வையை விளக்குகின்றன. இப் பயணங்களினுல் ஏற்பட்ட மற்ருெரு நன்மை, இந்தியில் முதல்

பிரயாண நூல் தோன்றியது. ராஜஸ்தானில் உள்ள உதைய பூருக்குச் சென்றது அவருடைய கடைசி பிரயாணம். அவருடைய நோய்க்கும் அதுவே காரணமாய் அமைந்தது. பிரயாணத்தில் அவருக்கிருந்த வேட்கையை எவராலும் தடுக்கவே முடியவில்லை.

இளவரசர்களும், பெருஞ்செல்வம் படைத்த ஜமீன்தாரின் பிள்ளைகளும் கற்பதற்கென நிறுவப்பட்ட கல்வி நிலையமொன்றில், ராஜேந்திரலால் மித்ரா பணியாற்றி வந்தார். இவர் பழம் பொருள் ஆய்வில் புகழ் பெற்றவர். இவர் அரிச்சந்திரரின் வீட்டின் பக்கத்தில் தங்கி இருந்தார். இருவரும் வைணவர்கள்; இருவருக்கும் பழக்கம் ஏற்பட்டது. அரிச்சந்திரர் பழம் பொருள் களைப்பற்றிய ஆய்வில் ஈடுபாடுகொண்டார். இதைப்பற்றி முதல் முதல் இந்தியில் ஆராய்ச்சி முறையில் கட்டுரைகளை எழுதினார். ஒரு ஆய்வு மாணவனைப் போல காசியில் பலவிடங்களுக்கும் சென்று நேரில் கண்டு, அங்குள்ள பழம் கோயில்களைப்பற்றி, அங்குக் கிடைக்கும் செப்பேடுகளைப்பற்றி எழுதினார். அவர் கல்கத்தா செல்லும்பொழுதெல்லாம், ஆசியக் கழகத்திற்குச் (ஏகியாட்டிக் சொசைட்டி) செல்லத் தவறமாட்டார். அக்கழகத் திற்குப் பல பழம் பிரதிகளைக் கொடுத்து உதவினார்.

இந்திய வரலாற்றில் பல்வேறு பகுதிகளைப்பற்றிய அரிச்சந்திரரின் கட்டுரைகளும் இந்திக்குப் புதியனவே. வரலாற்றுக் கட்டுரைகள் எழுதும்பொழுது அதைப்பற்றிக் கிடைக்கும் நூல்கள் அனைத்தையும் படித்துவிடுவார். இதனால் அவர் கட்டுரைகளில், புலமைமிக்க ஆங்கிலேயே, பிரஞ்சு வரலாற்றாசிரியர்களிடமிருந்து நிறைய மேற்கோள்களைக் காணலாம். இவருடைய வரலாற்று நூல்களில் முக்கியமானவை காஷ்மீர் தேசத்து வரலாறு (கல்ஹணரின் ராஜதரங்கிணியை அடிப்படையாகக் கொண்டது), உதயப்பூர், கோத்தா மன்னர்கள் வரலாறு, ராஜஸ்தானில் இருக்கும் சுதேச நாடுகளின் வரலாறு முதலியன. இந்த நூற்களை எழுதுவதற்கு டாட் எழுதிய **ஆனல்ஸ் ஆஃப் ராஜஸ்தான்** என்ற நூலை ஆழ்ந்து படித்தார். அனேக சுதேச மன்னர்கள் அரிச்சந்திரரைப் பெருமை படுத்தினர். இந்தி இலக்கியத்தின் புரவலராகிய உதயப்பூர் மன்னர், அரிச்சந்திரரைத் தனது சபைக்கு வருமாறு அழைத்தார். அரிச்சந்திரரின் பாவன்மை, எழுத் தாற்றல், அதிசயிக்கத்தக்க நுட்ப அறிவு இவைகளால் கவரப் பட்ட மன்னன், அன்று முதல் அவரைத் தன் நாட்டு மக்களில் ஒருவராகவே கருதிக்கொள்ளலாம் என்று கூறினாராம்.

காலச்சக்ராவில், அரிச்சந்திரர் உலக வரலாற்றைத் தொடர்ந்து எழுத முயன்றார்.

அரிச்சந்திரர் ஒரு வைணவ பக்தராக இருந்தாலும், விரிந்த மனப்பான்மையுடையவராகத் திகழ்ந்தார். இக்கால முறைப்படிக் கூறுவதென்றால் அவர் சமயச்சார்பற்றவர் என்றுதான் கூறவேண்டும். மதங்களிடையே ஒருமைப்பாட்டை ஒத்துக் கொண்டதோடு, அனைவரையும் ஒன்றாகக் கொண்டுவருவதற்குத் தன்னால் முடிந்ததை எல்லாம் செய்தார். ஒரு சமயம் அவர் சமணக் கோயிலுக்குச் சென்று வந்ததைக் குறை கூறினர். தான் சென்றது சரிதான் என்பதைக் காரணகாரியங்களோடு அழுத்த மாக விளக்கினார். சைவ மதம் பரிகசிக்கப்படுவதற்குரியதன்று என்று கூறினார். 1870-இல் சுவாமி தயானந்த சரஸ்வதிக்கு எதிரான பெரிய வாதத்தில் கலந்துகொண்டார். ஆரிய சமாஜத்தை நிறுவியவர். அக்காலத்தில் பெரிய மதாச்சாரியர்களை எல்லாம் புறங்கண்டவர். எனினும் பிறகு தயானந்தரே இவருடைய இதழ்களில் எழுதினார்—அதன் உதவி ஆசிரியர் ஆனார். பிற்காலத்தில், எல்லா இந்தியர்களும்—இந்துக்கள், மொகலாயர் கள், சீக்கியர்கள், கிறித்தவர்கள் அனைவரும் தங்களை இந்தியர் களாக நினைத்து, ஒன்றுபட்டு, நாட்டின் முன்னேற்றத்தில் தோளோடு தோள் இணைந்து செயலாற்ற வேண்டும் என்று எழுதி வந்தார். நாடு, பழைய சாதி—இன சம்பிரதாயங்களில் மூழ்கிக் கிடந்த காலத்தில், அவர் முன்னோக்கிப் பார்க்கும் ஒரு தீர்க்கதரிசியாக விளங்கினார்.

அவருடைய பெருமுயற்சியால் கடீபோலி உரைநடைக்குரிய மொழியாயிற்று. ஆனால் கவிதைகளில் அத்தகைய நிலையை அது பெறவில்லை. அரிச்சந்திரர் இலக்கிய உலகில் வருவதற்கு முன்பும், அவருடைய காலத்திலும் இனிய பிரஜ் மொழியே கவிதைக்குரிய மொழியாக இருந்து வந்தது. அதிலேயே பெரும்பான்மையான பக்தி இலக்கியங்களும் தோன்றின. ஆனால் எதிர்காலத்தில் கடீபோலிதான் பொது மொழியாக வந்தாக வேண்டும் என்பதை அவர் உணர்ந்திருந்தார். அந்த தீர்க்க தரிசனத்தினாலேயே, அவர் கடீபோலியில் கவிதைகள் எழுதத் தொடங்கினார். கடீபோலியில் எழுதப்பட்ட தனது சில கவிதைகளைக் கல்கத்தாவி லுள்ள 'பாரத மித்ரா' என்ற இதழுக்கு அனுப்பியதோடு, உடன் ஒரு கடிதமும் எழுதினார். "தயவு செய்து இவற்றைக் கவனமாகப் படித்து அவற்றில் உள்ள குறைகளை எழுதக் கேட்டுக்கொள்கிறேன். கடீபோலியில் எழுதப்படுகின்ற கவிதைகளை எப்படி அழகு படுத்தலாம் எனவும் எழுதவேண்டுகிறேன். இங்குப் பயன்படுத்தப் படுகின்ற மூன்று வகை யாப்புகளும் சோதனைக்காகவே எழுதப் பட்டிருக்கின்றன. மொழியின் இயல்புக்கு மிகவும் பொருந்துவது எது என்று கண்டுபிடிப்பதற்காகவே எழுதுகிறேன். இச்செய்யுட்

கள் எனக்கு மனநிறைவைக் கொடுக்கின்றன என்று கூறமுடியாது, பிரஜ் மொழியில் எழுதுவதைவிட இரண்டு பங்கு அதிகமான முயற்சியும், காலமும் இதற்குச் செலவு செய்ய வேண்டியது இருந்தது. ஆனால் அதற்கு என்ன காரணம் என்று கூறமுடிய வில்லை. முக்கியமான காரணம் கடீபோலியில் அதிகமான நெட்டுயிர்கள் இருப்பதே எனலாம். இதனால் சில இடங்களில், நெட்டுயிர்களுக்குப்பதில் குற்றுயிர்களே பயன்படுத்தி இருக் கின்றேன். நீங்களும், இவற்றைப் படிப்பவர்களும் உங்களுடைய எண்ணங்களை வெளியிட்டால், இதைப்போன்று மேலும் எழுத முயல்வேன்."

கடீபோலியில் கவிதைகள் எழுதியதைப் போல மற்றொன்றும் அவருடைய கவனத்தைக் கவர்ந்தது. அதுதான் இந்தியில் நாவல் கள் எழுதுவது. அவருடைய நண்பர் ஒருவருக்கு எழுதிய கடிதத் தில் அரிச்சந்திரர், இந்தியில் சில நாடகங்கள் எழுதப்பட்டிருக் கின்றன. ஆனால் நாவல்கள் எதுவும் இல்லை. தாங்களோ அல்லது இராதாசரண் கோஸ்வாமி, பாபு காசிநாத் போன்ற தங்கள் இதழின் உதவி ஆசிரியர்களோ, இந்தியில் சில நாவல்கள் எழுதினால் அது பெரிய பணியாகும். நீங்கள் உடன்பட்டால், **தீப்நாராயன்** என்ற நாவலை மொழிபெயர்க்கலாம் "இது வெறும் நாவல் மட்டுமன்று. இந்நாட்டின் நிலையை— ஏற்றத்தாழ்வுகளை விளக்குவது" என்று குறிப்பிட்டார். அவருடைய வங்காள மனைவி (இரண்டாம் மனைவி) மல்லிகாவை, வங்காள நாவல்களை இந்தியில் மொழிபெயர்க்குமாறு தூண்டினார். அவ்வம்மையார் **ராதாராணி சௌந்தர்யமயீ, சந்திரபிரபா பூர்ணபிரகாஷ்** என்ற மூன்று நாவல் களை மொழிபெயர்த்தார். ராதாராணியை அரிச்சந்திரருக்கே படையல் செய்தார். படையல் குறிப்பில் அவர் கூறுவது "நாகரிக மடைந்த சமூகம் பின்பற்றும் மரபுகளுக்கிணங்க, நான் அறிமுகமாவதற்குத் தகுதியற்றவள். இம்மொழி பெயர்ப்பில் பெரிய சாதனை எதனையும் நான் செய்துவிடவில்லை. இதனால் என்னை அறிமுகப்படுத்திக் கொள்வதற்கோ, நான் பெருமை படுவதற்கோ எதுவும் இல்லை. என்னை இப்பணியை மேற்கொள்ளு மாறு ஆணையிட்ட அருட்தொண்டருக்கு, எனது தலைவருக்கு, எளிய மொழியில் எழுதப்பட்ட இந்நூலைப் படையல் செய்கிறேன் என்பதே எனக்குப் போதும். எனது முயற்சியில் எனது தலைவர் அடையும் மகிழ்ச்சியே எனக்குப் பரிசு" என்று எழுதினார். மல்லிகாவின் தலைவர் இம்மூன்று நாவல்களின் நடையைச் செம்மை செய்து வெளியிட்டார்.

அரிச்சந்திரரே, பங்கிம்சந்திர சட்டர்ஜி எழுதிய **ராஜ்ஸிம்ஹா** என்ற நாவலை இந்தியில் மொழிபெயர்க்கத் தலைப்பட்டார். (நமது

போதாதகாலம், அது முற்றுப் பெறுமலே போயிற்று. அவர் இறந்தபின்பு, அவருடைய உறவினர் இராதாகிருஷ்ணதாஸ் அதனை மொழிபெயர்த்து முடித்தார்.) அரிச்சந்திரரின் தூண்டுதலினுலேயே இராதாகிருஷ்ணதாஸ், சுவர்ணலதா என்பதையும், பண்டித ராம் சங்கர் வியாஸ் மதுமாலதி என்பதையும் மொழிபெயர்த்தார். அரிச்சந்திரர் மேலும் சில ஆண்டுகள் வாழ்ந்திருந்தால், இந்தி இலக்கியத்தில் இந்தத் துறையையும் வளம்பெறச் செய்திருப்பார். ஆனுல் அதற்குக் கொடுத்துவைக்கவில்லையே.

அரிச்சந்திரரின் கட்டுப்பாடற்ற செலவு கவலைக்கிடமாக இருந்தது. அவருடைய நடத்தை அவருடைய உடல் நலத்தைப் பாதித்தது. அவர் தனது உடல் நலிந்து சாவை நோக்கிச் செல்வதை உணர்ந்துகொள்ள மறுத்தார். தன் உதாரித்தனமான வாழ்வை அவர் மாற்றிக்கொள்ள முயலவில்லை. கடினமான பிரயாணங்களை தவிர்க்கவும் முன்வரவில்லை. உண்மையைக் கூறுவதென்றுல், இந்நாட்களில் அதிகமாகவே பிரயாணம் செய்தார். உடல் நலிந்த இந்த நிலையில் உதயப்பூருக்கும், அங்கிருந்து தன் பழைய நண்பர் மோஹன்லால் வி. பாண்யாவைப் பார்க்க, அவர் வாழ்ந்த நாததுவாராவுக்கும் பிரயாணம் செய்தார். பிரயாணத்தின்போதே உடல் நலம் கெட்டது. காலரா, காய்ச்சல், மூச்சுவிட இயலாத நிலை இவைகளால் பாதிக்கப்பட்டு எப்படியோ தப்பி உயிர் வாழ்ந்துகொண்டிருந்தார். காசிக்குத் திரும்பி வந்ததும், தான் தொடங்கிய சில எழுத்துப் பணிகளை முடிப்பதில் தீவிரமாக ஈடுபட்டார். இந்திய நாடகங்களைப் பற்றிய தன் நூலை எழுதினுர். ஆங்கிலேயே அரசாங்க குழு வேண்டிக்கொண்டதற்கிணங்க ஆங்கிலேய தேசீய கீதத்தை இந்தியில் மொழிபெயர்த்துக் கொடுத்தார். மேலும் சில நாடகங்களையும் உரைநடைக் கட்டுரைகளையும் எழுதினுர். மற்றும் சில அலுவல்களை மேற்கொண்டார். மிகவும் தள்ளாத நிலையில் இருந்தாலும், அவருடைய **சத்திய ஹரிச்சந்திரா, நீல்தேவி** என்ற இரு நாடகங்கள் நடிக்கப்படும் பொழுது, உடன் இருந்து பார்ப்பதற்கு, பல்லியாவுக்குப் பிரயாணம் செய்தார். பொதுமக்கள் அவரைப் பெருமைப் படுத்தி, சேக்ஸ்பியரோடு ஒப்பிட்டார்கள். இந்தப் பயணத்தை அவர் மேற்கொண்டிருக்கக் கூடாது. திரும்பிவந்த சில வாரங்களிலேயே திரும்பவும் படுக்கையில் கிடக்கவேண்டிய நிலை ஏற்பட்டது. வைத்தியர் அவரை எழுதும் வேலையிலிருந்து தடுக்க முடியவில்லை. கடினமாகவே உழைத்தார். நாட்கள் செல்லச் செல்ல வலுவிழந்தார். நோய் அதிகமாயிற்று. 1885-இல் ஜனவரி ஐந்தாம் நாள் இக்கால இந்தி இலக்கியம், துளசி

தாசருக்குப் பின்பு தோன்றிய, இலக்கியப் பெரும் பேராசிரியரை இழந்தது. / இந்தி இலக்கிய உலகைப் பல முறைகளை நோக்கி— கவிதை, நாடகம், இதழியல், கட்டுரை, வரலாறு என்ற பல துறைகளை நோக்கி நடத்திச் சென்ற ஆசிரியர் மறைந்துவிட்டார். இந்தி மொழியை, மற்ற இந்திய மொழிகளுக்குப் பக்கத்தில் இட்டுச்செல்ல பெரும்பாடுபட்டார்.

அவருக்குச் சில மனக்குறைகள் இருந்தன. அவருடைய நண்பர்களிடத்தில் சொல்லுவாராம்; அடுத்த பிறப்பிலும் இந்த பிறப்பில் கிடைத்ததைப்போல அவருக்குச் செல்வம் கிடைக்குமானுல் அவர் செய்ய விரும்பிய பணிகள் நான்கு; (1) இந்திக்கு என்று ஒரு பல்கலைக்கழகம் நிறுவுதல்; அதில் இந்தி வழியாகவே பல கலைகளையும் கற்பித்தல், (2) குடும்ப தோட்ட வீட்டில் தாக்கூர்ஜிக்கு உருவச்சிலை ஒன்று எழுப்பி, தக்க மரியாதை செய்தல், (3) இந்தியாவின் வடமேற்குப் பகுதியில் கல்லூரி ஒன்று தொடங்குதல், (4) அமெரிக்கா, பிரான்சு, பிரிட்டன் இங்கெல்லாம் பிரயாணம் செய்தல்.

அந்தோ அவருடைய இந்த விருப்பம் எதுவும் நிறைவேற வில்லை. எனினும் கடீபோலியில் இந்தி இதழ்கள், நாடகங்கள், நாவல்கள், கட்டுரைகள் கவிதைகள் எழுதுவதற்குத் தகுந்த வழிகளைத் தெளிவாக வகுத்துக்கொடுத்துவிட்டார். அவரைப் பின்பற்றி எழுதுவதற்குப் பலரைப் தூண்டி உருவாக்கி விட்டுச் சென்றார். இராதாகிருஷ்ண தாஸ், சந்தோஷ் சீங், பாலகிருஷ்ண பட்டா, பத்ரி நாராயண சௌத்ரி பிரேம்கன், இராதா சரண கோஸ்வாமி என்று பலர், அவர் கொடுத்த ஒளி விளக்கை ஏந்திச் சென்று, அடுத்த சில ஆண்டுகளில் கடீபோலியை உரைநடை, கவிதை, இதழியல் ஆகிய பலவற்றிற்கும் உரிய மொழியாக அனைவரும் ஏற்றுக்கொள்ளுமாறு செய்தனர்.

# தெரிந்தெடுத்த ஆதார நூல்கள்


1. பாரதேந்து கிரந்தாவளி : தொகுதி I (நாடகங்கள்)
: தொகுதி II (கவிதைகள்)
: தொகுதி III (உரைநடை)

காசியில் உள்ள நாகரி பிரசாரிணி சபா இம் மூன்று தொகுதிகளையும் வெளியிட்டிருக்கிறது. பாபு ராம்தின்சிங் என்பவர் தனது பாட்ஞ, பங்கிப்பூரிலுள்ள கத்கவிலாஸ் அச்சகத்தில், பாரதேந்து இறந்தவுடன் சில மாதங் களுக்குள் வெளியிட்ட 'அரிச்சந்திர கலா' என்ற நூலி லிருந்தே பெரும்பகுதிகள் இத் தொகுதிகளில் இடம் பெற்றிருக்கின்றன. இந்நூல் கவிவசன சுதா, அரிச்சந்திர சந்திரிகா, பாலபோதினி அல்லது காசி மெடிகல் ஹால் அச்சகம், காசி லைட் இயந்திராலயம், காசி பிரிண்டிங் பிரஸ், சந்திர பிரபா அச்சகம், மல்லிகா சந்திர அண்டு கோ முதலிய பதிப்பகங்கள் வெளியிட்ட அரிச்சந்திரரின் நூல்கள் - இவற்றிலிருந்து பெரும் பகுதியைத் திரட்டியே அரிச்சந்திர கலா வெளியிடப்பட்டது.

2. சரஸ்வதி. 1901-இதில் வெளிவந்த இராதாகிருஷ்ண தாஸ் எழுதிய பாரதேந்துவின் வாழ்க்கைச்சுருக்கம், பாபு சியோ நந்தன் சகாப் எழுதிய அரிச்சந்திரர் வாழ்க்கை வரலாறு ஆகிய இரண்டும்.

3. பாரதேந்து அரிச்சந்திரர் — பிரஜ்ரத்தின தாஸ்
4. ” — ராம் பிலாஸ் சர்மா
5. ” — R. சௌகான்

6. பாரதேந்து அரிச்சந்திரர் — L.S. வார்ஷினேயா

7. ” — R. பட்நாகர்

8. பாரதேந்துவின் நாட்டிய சாகித்தியம் — V. சுக்குலா

9. பாரதேந்து கலா — சிவ தார், மற்றும் பிறர்

10. பாரதேந்துவும் சஹயோகி கவிஞரும் — கிசோரி லால் குப்தா

11. பாரதேந்துவின் நாட்டிய கலா — பி. சர்மா

12. பாரதேந்து யுகம் — ராம் பிலாஸ் சர்மா

---

